அவிஸோ வெளியீடு - 9

பன்னூலாசிரியர்
அதிரை S.S. மௌலானாவின்

# தப்லீகின் அதிசய கருத்துகள் ஆயிரம்

வெளியீடு :
அவிஸோ பப்ளிஷர்ஸ்
அதிராம்பட்டினம், தஞ்சை மாவட்டம்.
தொடர்புக்கு : 9788194182



# "தப்லீகின் அதிசய கருத்துக்கள் ஆயிரம்"

(முதல் பாகம்)


பன்னூலாசிரியர்

மௌலானா, மௌலவி

S.S.முஹம்மது ஷைகு அப்துல்லாஹ் (மன்பயீ, காதிரி)

நிறுவனத் தலைவர்

அவிஸோ மனவளர்ச்சி குன்றிய சிறப்பு குழந்தைகள் உண்டு, உறைவிட பள்ளி

அதிராம்பட்டினம். செல்: 9842466529



வெளியீடு:

**அவிஸோ பப்ளிஷர்ஸ்**

5V/1, சேதுரோடு, சாரா திருமண மண்டபம் பின்புறம்

அதிராம்பட்டினம்- 614 701

தஞ்சை மாவட்டம்

செல்: 9788194182

# புத்தக விபரக் குறிப்பு


நூலின் பெயர் : தப்லீகின் அதிசய கருத்துக்கள் ஆயிரம் (முதல் பாகம்)

நூலாசிரியர் : மௌலானா. S.S.முஹம்மது ஷைகு அப்துல்லாஹ் (மன்பயீ, காதிரி)

மொழி : தமிழ்

பதிப்புரிமை : ஆசிரியருக்கே!

முதற்பதிப்பு : ஹிஜ்ரி 1434 ஸபர்
கி.பி.2013 ஜனவரி

பக்கங்கள் : 88

ஒளி அச்சு : சலாமத் பதிப்பகம்

கிடைக்குமிடம் மற்றும் கடிதத் தொடர்பு : அவிஸோ பப்ளிஷர்ஸ்
அவிஸோ மனவளர்ச்சி குன்றிய
சிறப்புக் குழந்தைகள்
உண்டு உறைவிடப்பள்ளி
5V/1, சேதுரோடு,
அதிராம்பட்டினம் - 614 701

ஹதியா : ரூ.40


**சமர்ப்பணம்**

எனது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹீ அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கும் புனித அஹ்லேபைத் குடும்பத்தினருக்கும், மர்ஹூம்களான எங்கள் தாய்மார்கள் S.அஹமது நாச்சியார். A. ஜூம்மாபீவி அவர்களுக்கும்

# பதிப்புரை

பிஸ்மில்லா ஹிர் ரஹ்மானிற் றஹீம்

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹூ

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே!

எங்கள் அவிஸோ பப்ளிஷர்ஸ் மூலம் மக்களுக்கு பலன் அளிக்கக் கூடிய நூல்கள் எழுதி வெளியிடவேண்டும் என்ற தூய்மையான நிய்யத்துடன் ஒருசில நூல்களை எழுதி வெளியிட்டு வருகிறோம்.

இதுவரை எட்டு நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. நாடறிந்த எழுத்தாளர் பன்னூலாசிரியர் அதிரை S.S. மௌலானா அவர்களின் கைவண்ணத்தில் உருவான நூல்களை மட்டும் இன்ஷா அல்லாஹ் இந்த அவிஸோ பப்ளிஷர்ஸ் வெளியிடும் என்பதை உலக மக்களுக்கு தெரிவித்துக் கொள்வதில் பெருமிதம் கொள்கிறோம். அல்ஹம்து லில்லாஹ்!

இன்றைய தஃவத்துடைய வேலை அல்லாஹ் கொடுத்த பெரும் பாக்கியமாகும். தஃவத்துடைய வேலையில் ஈடுபடும் மக்கள் வேலையின் எல்லா விஷயங்களையும் அறிந்து வேலை செய்ய வேண்டும். அப்பொழுதுதான் வேலை உலகம் முழுவதும் பரவி மக்களை ஈமான் பக்கம் கொண்டு வரும்.

இந்த வேலை பெரும் கடல்போன்றது. இதில் யாரும் ஆழம் காணவே முடியாது. மௌத்துவரை வேலை செய்து கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஈமானின் ருசியை அடைய முடியும். வேலையை விளங்காமல் செய்யும் ருசியைவிட வேலையை விளங்கி செய்வதில் உள்ள ருசியோ தனி ருசியாகும்.

மேலும் தீனுடைய வேலை செய்பவர்கள் வேலையின் கருத்துக்களை புரிந்து இஹ்லாஸோடு வேலை செய்ய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் இந்நூலில் வேலைபற்றிய அதிசய பல கருத்துகளை S.S. மௌலானா அவர்கள் எழுதி உள்ளார்கள்.

இந்த முதல் பாகத்தில் மொத்தம் 100 கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன இன்ஷா அல்லாஹ் இன்னும் 9 நூல்கள் தலா 100, கருத்துக்களோடு கூடிய விரைவில் அவிஸோ பப்ளிஷர்ஸ் மூலம் வெளிவர நூல்கள் தயாராகி கொண்டிருக்கின்றன வாசகர்கள் அனைவரும் துஆ செய்யுமாறு மிக்க அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

அனைவரும் நூலை வாங்கிப்படித்து வேலையின் அந்தரங்கத்தை விளங்கி இஹ்லாஸோடு வேலை செய்து, அத்துடன் அமலும் செய்து அல்லாஹ்வின் பொருத்தம் அடைவோமாக.

அதற்கு இந்நூல் மிகவும் உறுதுணையாக இருக்கும். வாசகர்கள் அனைவரும் இந்நூலை வாங்கிப் படித்து மற்றவர்களுக்கும் எத்தி வையுங்கள். இந்நூலின் குறைகள் எங்களைச் சாரும். நிறைகள் ரப்புல் ஆலமீனை சாரும். எப்போதும் உங்களின் ஆதரவையும், ஊக்கத்தையும், துஆவையும் எதிர்பார்க்கும்.

அன்புடன்

**அவிஸோ பப்ளிஷர்ஸ்**

அதிராம்பட்டினம்

செல்: 9788194182

# "நெஞ்சோடு கொஞ்சம்"

பிஸ்மில்லா ஹிர் ரஹ்மானிற் றஹீம்

நிச்சயமாக நல்லுபதேசம் விசுவாசிகளுக்கு பயன ளிக்கும். *(அல் குர்ஆன்: 51:55)*

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

அனைத்துப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! '

ஸலாத்தும், ஸலாமும் நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கே!

அல்லாஹு தாஆலா தனது மேலான கிருபையால் ஹஜ்ரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு காற்றை வசப்படுத்திக் கொடுத்ததைப்போல இன்று முபாரக்கான தஃவத்துடைய உழைப்பை முஸ்லிம்களுக்கு வசப்படுத்திக் கொடுத்துள்ளான்.

ஹஜ்ரத் நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பலைப் போல இந்த முபாரக்கான வேலை உலகம் முழுவதும் சுற்றி வருகிறது.

## "வானத்துப் பஷாரத்துகள் இறங்கும் வேலை"

இன்று உலக நாடுகளில் தஃவத்துடைய உழைப்பின் தாக்கம் உள்ளங்களில் ஊடுருவி மனித மனங்களில் தீனுடைய மணம் வீசத் துவங்கி விட்டது. இந்த வேலை போகாத நாடுகளே இல்லை என்னும் அளவுக்கு பூமியின் அனைத்து மண்ணையும் தொட்டுவிட்டது. சஹாபாக்கள் காலத்தில் இந்த முபாரக்கான உழைப்பின் மூலம் விண்ணுக்கும், மண்ணுக்கும் எந்த அளவு தொடர்பு இருந்ததோ அத்தகைய தொடர்புகள் உருவாகி வருகிறது. மண்ணிலிருந்து குர்பானிகளும்,

முஜாஹறதாக்களும் போட்டி போட்டுக்கொண்டு விண்ணுக்கு சென்று கொண்டிருக்கின்றன. அதன் மூலம் வானத்து பஷாரத்துகள் மண்ணுக்கு இறங்க துவங்கிவிட்டது.

## "மஸ்ஜிதுகள் செழிப்பாகும் வேலை"

தஃவத் உழைப்பின் பரக்கத்தில் உலகெங்கிலும் லட்சக்கணக்கான அல்லாஹ்வின் வீடுகள் உருவாகி அதிலே மஸ்ஜித் நபவியின் பரக்கத்தான அமல்கள் செழிப்பாகி வருகிறது. பல நாடுகளில் 24 மணிநேரமும் இடைவிடாது அமல்கள் நடக்கும் மஸ்ஜித்துகள் உருவாகிவிட்டது. அமலே ஹிதாயத்தான மஸ்ஜிதுவார் ஐந்து அமல்கள் நடக்கும் பள்ளிகள் துளிர்விட்டு வளர்ந்து வருகிறது. தொழுகையின் ஸப்புகள் அதிகமாகிவிட்டன.

அவ்வல் தக்பீர் என்ன? பாங்கு சொல்வதற்கு முன்பே பள்ளிக்கு வந்து தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் முதல் ரேங்க் மக்கள் உருவாகி விட்டார்கள். நீங்கள் எப்படி?

## "அதிசயமான வேலை"

இது என்ன புது தலைப்பாக இருக்கு?

"தப்லீகின் அதிசய கருத்துக்கள் ஆயிரம்" என்று உங்கள் உள் மனம் ஓடும் ஓட்டம் எனக்குப் புரிகிறது. இந்த முபாரக்கான வேலையில் எதுதான் அதிசயம் இல்லை? எல்லாமே அதிசயம்தான் இந்த வேலை வந்தது அதிசயம். இந்த வேலையின் உழைப்பு அதிசயம். வாராவாரம் நடந்து தெருக்களை வலம் வரும் கஷ்த் ஓர் அதிசயம். மசூராவின் மூலம் முடிவெடுக்கும் காரியங்கள் ஓர் அதிசயம்.

பயானை கேளுங்கள். அதில் ஒரு அதிசயம் இருக்கும். பயான் முடிவில் நடக்கும் தஸ்கீல் ஓர் அதிசயம். பயானுக்கு முன் நடக்கும் எஃலான் ஒரு அதிசயம். உலகமே சுகமான தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும்போது தஹஜ்ஜத்தில் எழுந்து நமது

உயிரினும் மேலான கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் உம்மத்தின் ஹிதாயத்துக்காகவும், தனது பாவ மன்னிப்புக்காகவும் தொழுது அழுது கண்ணீர் வடிப்பது மாபெரும் அதிசயம்.

## "ஒவ்வொரு உசூலும் அதிசயமே!"

தப்லீகில் எதுங்க அதிசயம் இல்லை? மனைவி மக்களைப் பிரிந்து வியாபாரம், தொழில் துறவுகளை பிரிந்து, சொந்த ஊரை பிரிந்து, முஹப்பத்தான வீடு, வீட்டு வசதிகளை பிரிந்து மற்றோர் ஊரில் அதுவும் பள்ளியில் 3 நாள் 40 நாள் 4 மாதம் என்று தங்குவது உலக மகா அதிசயமல்லவா? உலக அதிசயங்கள் மட்டும்தான் அதிசயமாக உங்கள் கண்ணுக்கு தெரிகிறதா? தஃவத் உழைப்பில் ஒவ்வொரு உசூலும் அதிசயம் தாங்க.

தவறு செய்தவர்கள் திருந்துவது அதிசயமல்லவா? தவ்வாபீன்கள் உருவாகி விட்டார்களே இது அதிசயமல்லவா? முஃமினீன்கள், முதவக்கிலீன்கள், முபிலிஸீன்கள், முத்தகீன்கள் உருவாகி வருவது அதிசயமல்லவா?

## "இது உலக அதிசயமல்லவா?"

பள்ளி தஃலீம், வீட்டு தஃலீம் மூலமாக லட்சோப லட்சம் ஆண்,பெண்கள் குழந்தைகள் பலன்பெற்று தீன்தாரிகளாகி விட்டார்களே இது பெரிய உலகமகா அதிசயமல்லவா? இந்த முபாரக்கான உழைப்பின் மூலம் பல ஆயிரம் மதரஸாக்களும், ஆலிம்களும், முப்திகளும், ஹாபிஸாக்களும் உருவாகி உம்மத்தில் உலா வருகிறார்களே இது அதிசயமல்லவா?

வாலிபர்களின் முகத்திலே சுன்னத்தான தாடியும், உடலில் சுன்னத்தான கோலமும் ஏற்பட்டுவிட்டதே இது உங்களுக்கு அதிசயமாகத் தெரியவில்லையா?

சவூதி மன்னர் ஒருவர் இங்கிலாந்தில் ஒரு மஸ்ஜித் கட்ட அந்த நாட்டு அரசாங்கத்திடம் அனுமதிகேட்டார். அதற்கு

அந்நாட்டு அரசாங்கம் என்ன சொன்னது தெரியுமா? உங்கள் மக்காவில் உள்ள கஃபாவுக்கு பக்கத்திலே எங்களுக்கு ஒரு சர்ச் கட்ட அனுமதி தந்தால் நாங்கள் எங்கள் நாட்டில் உங்களுக்கு பள்ளி கட்ட அனுமதி தருவோம் என்றது.

பல வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் இது. மன்னர் இறந்து விட்டார். அவர் உயிரோடு இருக்கும்வரை அவரின் ஆட்சி, அதிகாரம், பதவி, செல்வம் இவைகளைக் கொண்டு இங்கிலாந்தில் ஒரே ஒரு மஸ்ஜித் கட்ட முடியவில்லை. ஆனால் இன்று இந்த புனிதமான தஃவத் உழைப்பு மூலமாக மொத்த இங்கிலாந்தில் 700-க்கும் மேற்பட்ட அல்லாஹ்வின் வீடுகள் உதயமாகிவிட்டதே! இது உலக அதிசயமல்லவா?

என்ன யோசிக்கிறீர்கள்?

## "நீங்கள் நினைப்பதுபோல் அல்ல"

நீங்கள் நினைப்பதுபோல தப்லீக் என்பது சட்டி பெட்டிகளையும், பேக், பைகளையும் தூக்கிக்கொண்டு ஊர், உலகம் சுற்றும் சோம்பேறிகள் பிழைக்கத் தெரியாத அப்பாவிகள் செய்யும் வேலை அல்ல. இன்றைய கால கட்டத்தில் இந்த முபாரக்கான வேலையில் ஈடுபட்டு தங்களை சீர்திருத்திக் கொண்டு நமது உயிரினும் மேலான கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் கவலையை சுமந்து கொண்டு, இந்த உம்மத்தின் மேலான நலனுக்காக அனைத்து உம்மத்துகளும் நரகிலிருந்து தப்பித்து சுவனம் புகவேண்டும் என்று அழுது கண்ணீர் வடிக்கிறார்களே அவர்கள்தான் உண்மையில் புத்திசாலிகள்.

## எவ்வளவு பெரிய ஏமாற்றம்?

ஒவ்வொரு முஃமினும் தன்னுடைய ஈமானைப் பாதுகாப்பது பர்ளாகும். ஈமானின் திருடன் ஷைத்தானின் வஞ்சக வலையிலிருந்து தப்பித்து ஈமானை பாதுகாப்பது

என்பது சாதாரண விஷயமா? ஈமானுக்கு உலைவைக்கும் மாஹீலில் வாழ்ந்து கொண்டு, ஈமானோடு மரணிப்பது என்பது சாமானிய விஷயமா? கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். நமது சக்ராத் சரியாகனும். கப்ர் சரியாகனும், மஹ்ஷர் சரியாகனும். அதற்கு என்ன வழி இருக்கு இந்த உலகில். சடங்குபோல நம்மிடம் உள்ள கலிமா, தொழுகை போதுமா? வருஷா வருஷம் நோன்பு வைக்கியோம், ஜக்காத் கொடுக்கிறோம். ஹஜ்ஜை முடிச்சாச்சி. வேறு என்ன இருக்கு? என்று போதுமென்ற மனம் உடையவர்கள் இன்று நம்மிடம் அதிகம் இருக்கிறார்கள். இது எவ்வளவு பெரிய ஏமாற்றம். இப்படிச் சொல்லி நம்மை ஏமாற்றி வழிகெடுத்து விடுவான் ஷைத்தான் எச்சரிக்கை.

## முயலாமையே அறியாமை

ஷைத்தான் நமக்கு சாதாரண பகைவன் அல்ல. பரம்பரை பகைவன். அவன்தான் நமது உண்மையான எதிரி. அவனைத்தான் நாம் எதிரியாக்கிக் கொள்ள வேண்டும்.

அவனைப் பற்றி எச்சரிக்காத நபிமார்கள் இல்லை. அவனைப்பற்றி அச்சமூட்டாத வேதங்கள் இல்லை. அவன் விஷயத்தில் நாம் எவ்வளவு அசால்டா இருக்கிறோம். இது எவ்வளவு பெரிய அறியாமை.

ஒரு அறிஞன் சொன்னான்.

“அறியாமை என்பது தெரியாமை அல்ல.

தெரிந்து கொள்ள முயலாமையே”

மனித குல மகாபெரிய பகைவன் ஷைத்தான். அவனைப் பற்றி தெரிந்துகொள்ள முயலாமையே நமது இன்றைய அறியாமை. ஷைத்தானையும், அவனின் வஞ்சக சூழ்ச்சிகளையும் தெரிந்து கொண்டாலே போதும். நமது ஈமானின் மதிப்பும், விலையும் என்னவென்று புரியும்.

## "பரம்பரை பகைவன் அல்லவா?"

உலகில் எல்லா வசதிகளும் அடங்கிய சொகுசு பங்களாவில் கணவன், மனைவி இரண்டுபேரும் உல்லாசமாக சுகத்தை அனுபவித்தால் எப்படி இருக்கும்? அதுபோலதான் நமது மூல தந்தை ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் மூல தாய் ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் அவர்களும் சுவன லோகத்தில் எந்தப் பிரச்சனையும் இல்லாமல் உல்லாச வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் எப்படி பூமிக்கு வந்தார்கள் என்ற வரலாறு உங்கள் அனைவருக்கும் தெரியும். ஏன்? உலகத்திற்கே தெரியும். பிரச்சனைக்குக் காரணம் யார்? ஷைத்தான் என்பதும் அனைவருக்கும் தெரியும்.

இதைப்பற்றி அல்லாஹ் சொல்வதைக் கேளுங்கள். "எனினும் ஷைத்தான் அவர்கள் இருவரையும் அதிலிருந்து பிறழச் செய்து அவர்களிருவரும் இந்த (உயர்வான) நிலையை விட்டு அவ்விருவரையும் வெளியேற்றி விட்டான். இன்னும் "நீங்கள் (யாவரும் இங்கிருந்து) இறங்குங்கள் உங்களில் சிலர் சிலருக்கு பகைவராக இருப்பீர்கள். பூமியில் ஒரு குறிப்பிட்ட காலம்வரை உங்களுக்கு தங்குமிடமும், சுகம் அனுபவிக்கும் பொருட்களும் உண்டு" என்று நாம் கூறினோம்.

*(அல் குர்ஆன்: அத்:2, வச:36)*

அல்லாஹ் சொன்னதைப் பார்த்தீர்களா? ஷைத்தான் நமக்கு பரம்பரை பகைவன் என்று சொன்னேன் அல்லவா? நீங்கள் விளங்கி கொண்டால் சரி.

## "பெண்கள் ஷைத்தானின் வலைகள்"

ஹஜ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தாய் அதாவது இம்ரானின் மனைவி ஷைத்தானின் சூழ்ச்சிகளை விளங்கி இருந்ததால், தான் பெற்றெடுத்த பெண் குழந்தைக்கு

ஷைத்தானின் தீங்கு வந்துவிடக்கூடாது ,என்று மிகமிக எச்சரிக்கையுடன் குழந்தை மரியம் அலைஹிஸ்ஸலாம் பற்றி ஷைத்தானின் தீங்குகளை விட்டு பாதுகாப்பு தேடி அல்லாஹ் விடம் துஆ செய்துள்ளார்.

பெண்கள்தான் ஷைத்தானின் வலைகள். அவர்களை வைத்து அவன் தன் காரியங்களை மிக எளிதாக முடித்துக் கொள்வான். எனவே ஒரு தாய் தனது பெண் குழந்தைக்கு ஷைத்தானின் தீங்குகளை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக்காக துஆ செய்ய வேண்டும் என்பதையும் இங்கு அல்லாஹ் ஒவ்வொரு பெற்றோர்களுக்கும் தெளிவாகவே சொல்லிக்காட்டுகிறான்.

இதோ அல்லாஹ் சொல்வதைப் பாருங்கள்.

"அதனை அவள் பெற்றெடுத்த பொழுது என்னுடைய இறைவனே! நிச்சயமாக நான் இதனைப் பெண்ணாகப் பெற்றெடுத்திருக்கிறேன் என்று அவள் கூறினாள். அவள் பெற்றெடுத்ததை அல்லாஹ் நன்கு அறிந்திருக்கிறான். (எனினும்) அந்த ஆண் இந்த பெண் போன்று இல்லை. நிச்சயமாக நான் இதற்கு மர்யம் எனப் பெயரிட்டுள்ளேன்! நிச்சயமாக நான் இதற்கும் (இக் குழந்தைக்கும்) இதன் சந்ததிகளுக்கும் விரட்டியடிக்கப்பட்ட ஷைத்தானி (ன் தீங்குகளி) லிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்". (என்றும் அவள் கூறினாள்) *(அல்குர்ஆன்: அத்:3 வச:36)*

## "பகிரங்கப் பகைவன் யார்?"

இதனால்தான் ஷைத்தான் நமக்குப் பகைவன் என்றும் அவனை நீங்கள் பகைத்தே வாழுங்கள் என்றும் அல்லாஹு தாஆலா தனது புனித குர்ஆனிலே உலக மக்களுக்கு பிரகடனம் செய்கின்றான். ஹஜ்ரத் யூசுப் அலைஹிஸ்ஸலாம் ஒரு அற்புத கனவு ஒன்று கண்டார்கள். அந்தக் கனவைப்பற்றி தமது தந்தை யாகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் சொன்னார்கள்.

இதைக் கேட்ட தந்தையவர்கள் சொன்ன வரர்த்தைகள் இருக்கின்றனவே இது மிகவும் துள்ளியமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயமாகும். கண்டது கனவுதான். கனவு வெளியே தெரிந்தால் ஷைத்தானின் கொரில்லா தாக்குதலுக்கு நீ ஆளாக நேரிடும், எச்சரிக்கை. உன் சகோதரர்களிடம் சொல்லி விடாதே என்ற தோரணையில் மகன் கண்ட கனவுக்கு விளக்கம் சொல்லாமல் ஷைத்தானின் எச்சரிக்கையைத்தான் முதன் முதலில் சொல்லி எச்சரித்துள்ளார்கள். காரணம் அவன் மனிதகுல மாபெரும் பகைவன். இதைத்தான் அல்லாஹ் நமக்கும் அவனுடைய வேதத்தில் எச்சரித்துள்ளான். இதோ மகனின் கனவும், தந்தையின் எச்சரிக்கையும் பாருங்கள்.

யூசுப் தம் தந்தையிடம் ''என் அருமைத் தந்தையே! நிச்சயமாக நான் பதினொரு நட்சத்திரங்களையும், சூரியனையும், சந்திரனையும் (கனவில்) கண்டேன். எனக்கு சிரம் பணிபவையாக அவற்றை நான் கண்டேன்'' என்று கூறியபோது,

என் அருமை மகனே! உன்னுடைய கனவை உன் சகோதரர்களிடம் நீ சொல்லி காட்ட வேண்டாம். (அவ்வாறு கூறினால்) உனக்கு தீங்கிழைக்க அவர்கள் சதி செய்ய முனைவார்கள். நிச்சயமாக ஷைத்தான் மனிதனுக்கு பகிரங்கமான பகைவனாக இருக்கிறான் என்று அவர் கூறினார்.

*(அல்குர்ஆன்: அத்:12-வச: 4,5)*

## "அல்லாஹ் சொல்லிதரும் உண்மைகள்"

இதனால்தான் அல்லாஹு தாஆலா ஷைத்தானைப் பற்றி மற்றோர் இடத்தில் இப்படி கூறி காட்டுகிறான்.

("ஷைத்தானாகிய) அவன் அவர்களுக்கு (பலவிதமாக) வாக்களிக்கிறான். அவர்களுக்கு (உலக ஆசைகள் பற்றி) மேலெண்ணங்களை உண்டாக்குகிறான்! அவர்களுக்கு

ஷைத்தான் ஏமாற்றத்தை தவிர (வேறெதையும்) வாக்களிப்பதில்லை.

*-அல் குர்ஆன்: அத்:4, வச:120*

மற்றோர் இடத்திலே கூறும்போது...

''விசுவாசிகளே! ஷைத்தானின் வழிமுறைகளைப் பின்பற்றாதீர்கள். (ஏனெனில்) எவர் ஷைத்தானின் வழிமுறைகளை பின்பற்றுகிறாரோ அவரை அவன் மானக்கேடான காரியங்களையும், பாவச் செயல்களையும் செய்யும்படி நிச்சயமாக ஏவிக்கொண்டிருப்பான்.

*(அல் குர்ஆன்: அத்: 24, வச:20)*

பார்த்தீர்களா? ஷைத்தானைப் பற்றி அல்லாஹு தாஆலா சொல்லித் தரும் உண்மைகளை.

அவனின் உலக ஆசைக்கான மேலெண்ணமும், மானக்கேடான பாவமான காரியங்களை ஏவுவதும், சாதாரண விஷயமல்ல. இவைகளை செய்தால் முடிவு, அவர்கள் போய்ச்சேரும் இடம் நரகம்தான். அதுதான் அவனின் விருப்பம்.

இதனால்தான் அல்லாஹ் மற்றோர் இடத்தில் மேற்கண்ட ஷைத்தானின் சூழ்ச்சியில் யார் சிக்கிக் கொண்டார்களோ அவர்கள் ஒதுங்குமிடம் நரகம் என்று எச்சரிக்கிறான்.

இதோ அந்த வசனம்.

"இத்தகையோர்- அவர்களின் ஒதுங்குமிடம் நரகம்தான். அதை விட்டும் தப்பிஓடும் இடத்தை அவர்கள் பெற்றுக் கொள்ளமாட்டார்கள். *(அல் குர்ஆன்: அத்:4, வச: 121)*

## ''விரோதியாக்கி கொள்ளுங்கள்''

மனித இனத்திற்கு இவ்வளவு கொடிய பகைவனாக, எதிரியாகத் திகழும் ஷைத்தானை நாம் நண்பனாக்கிக்

கொள்ளலாமா? எதிரியின் தீங்குகளை விளங்கி அவனை எதிரியாக்கி, அவனை விட்டும் தப்பிக்க முயற்சி செய்து கொண்டே இருக்க வேண்டும்.

ஷைத்தான் உங்களுக்கு எதிரி என்று மட்டும் சொல்லி விட்டு விடவில்லை. அவனை எதிரியாக ஆக்கிக் கொள்ளுங்கள் என்றும் அல்லாஹ் சொல்லிவிட்டான். இதோ அந்த வசனத்தைப் பாருங்கள்.

"நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு பகிரங்க விரோதியாகும். எனவே நீங்கள் அவனை விரோதியாக்கிக் கொள்ளுங்கள். *(அல் குர்ஆன்: அத்:35, வச:6)*

தயாராகி விட்டீர்களா?

## ஓர் உண்மை தெரியுமா உங்களுக்கு?

நமது உயிரினும்மேலான ஹயாத் நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் ஷைத்தானைப் பற்றி ஒரே வார்த்தையில் இரத்தின சுருக்கமாக உலகிற்கு எச்சரித்து விட்டார்கள். இதோ அந்த அற்புத பொன் வார்த்தை.

"ஆதமுடைய மக்களின் இரத்தம் ஓடும் இடங்களி லெல்லாம் ஷைத்தான் ஓடித் திரிகிறான் என்று கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் அருளினார்கள்.

*(அறிவிப்பு: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு*
*தகவல்: புகாரி, முஸ்லிம்*

இந்த ஹதீஸிலிருந்து ஷைத்தானின் விளையாட் மைதானம் எது என்பதை புரிந்திருப்பீர்கள்.

இங்கு நாம் சிந்திக்க வேண்டிய விஷயம் அல்லாஹ்வு ரசூலும் ஒற்றுமையாக மாபெரும் உண்மையை இ உலகத்திற்கு சொல்லிவிட்டார்கள். ஷைத்தான் உலகில் உ அனைத்து படைப்புகளில் யாருக்கும் அவன் எதிரி அல்

மாறரக மனிதனுக்கு மட்டும்தான் எதிரி என்ற உண்மை, நமக்கு புரிந்து விட்டது.

மேற்கண்ட அல்லாஹ்வின் கூற்றுகளை புரட்டிப் பாருங்கள். கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் இந்த பொன்மொழியையும் பாருங்கள். உண்மை உங்களுக்கு விளங்கும்.

## "ஷைத்தானின் 90 ஆயிரம் தந்திரங்கள்"

ஆதம் அலைஹிஸ்ஸலாம் தொட்டு கியாமத் இறுதி நாளில் பிறக்கும் கடைசி மனிதன்வரை ஷைத்தானுக்கு எதிரி யாவார்கள். ஷைத்தான் மனிதனை கெடுக்க 90 ஆயிரம் தந்திரங்கள் வைத்துள்ளான் என்றும் 30 ஆயிரம் தந்திரங்கள் உலகிலும், பாக்கி 60 ஆயிரத்தை சக்ராத் நேரத்திலும் கெடுப்பதற்காக தயாரித்து வைத்துள்ளான் என்பதை ஒரு ஹதீஸ் நமக்கு எச்சரிக்கிறது. உலகில் பிறந்த மனிதன் யாராக இருந்தாலும் சரி (நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல் லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களை தவிர) அனைவர்களையும் எப்படியும் வழிகெடுத்து அவர்களின் ஈமானை பிடிங்கி விட போர்க்கால முயற்சி செய்து கொண்டே இருப்பான்.

இதில் விழிப்புணர்வு நமக்குதான் வேண்டும். எதிரியாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

ஷைத்தான் யாருக்கு நண்பன் தெரியுமா?

இதோ அல்லாஹ் சொல்கிறான் பாருங்கள்.

"நிச்சயமாக ஈமான் கொள்ளாதவர்களுக்குத்தான் அந்த ஷைத்தான்களை நாம் நண்பர்களாக்கி இருக்கிறோம்.

*(அல் குர்ஆன்: அத்:7, வச:27)*

இதிலிருந்து ஷைத்தான் ஈமான்தாரிகளுக்கு எதிரி என்று புலனாகிறது.

## "கேள்விக்கு விடை சொல்"

ஈமான்தாரி எவ்வளவு பெரிய குத்புவாக இருந்தாலு வலியாக இருந்தாலும் அப்தாலாக இருந்தாலும் சரி அவர்கள வழிகெடுக்க பாடுபடுவான்.

ஒரு சமயம் அல்லாஹுத் தாஆலா ஷைத்தான்களி தலைவனாகிய இப்லீஸை நோக்கி இப்லீஸே! என் ஹ முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களிட நீ சென்று அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விடை சொ என்று உத்திரவிட்டான்.

உடனே மறுப்பேதும் கூறாமல் இப்லீஸ் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் முன்ன கையில் ஊன்றுகோல் ஏந்திய ஒரு வயோதிகரின் வடிவி தோன்றினான். கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி ஸல்லம் அவனை நோக்கி "யார் நீ?" என்று கேட்டார்க அதற்கு அவன் நான்தான் இப்லீஸ் என்றான். உடனே கண்ம நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்க வியப்புற்று ஏன் இங்கு வந்தாய்? என்று வினவினார்க அல்லாஹ் தான் என்னை உங்களிடம் வரச்சொன்னான். நீங் என்னிடம் கேட்க விரும்பும் கேள்விகளுக்கெல்லாம் நா விடை சொல்லியாக வேண்டும் என்று நான் அல்லாஹ்வ ஏவப்பட்டுள்ளேன் என்று இப்லீஸ் கூறினான்.

## "ஷைத்தான் சொன்ன உண்மைகள்"

இதைக்கேட்ட கண்மணி நபி ஸல்லல்லா அலைஹிவ ஸல்லம் அவர்கள், முதல் கேள்வியாக, உம்மத்தினரில் உனக்கு எதிரிகள் எத்தனை பேர்? என கேட்டார்கள். அதற்கு இப்லீஸ் சொன்ன பதில் "உங் உம்மத்தினரில் 15 பேர் என் பரம விரோதிகளாவார். அவர்க மிகப்பெரிய முக்கிய விரோதி தாங்களேதான்! அடு நீதியுள்ள அரசர், பணிவு உள்ள பணக்காரர், வாய்மை தவ

வியாபாரி, உள்ளச்சமுள்ள உலமாக்கள், பிறருக்கு அறிவுரை பகரும் முஃமீன், தவ்பா செய்து விட்டு விலகி வாழ்பவர், எல்லா நேரங்களிலும் ஒழுவுடன் இருப்பவர், மக்களுடன் நற் குணத்தோடு பழகுபவர், மக்களுக்கு நலன் புரிபவர், குர்ஆனை மனனம் செய்து அதை எப்போதும் ஓதிக் கொண்டிருக்கும் ஹாபிஸ்கள். ஈகையில் சிறந்த முஃமீன், மக்களெல்லாம் தூங்கும் நடுநிசியில் விழித்திருந்து அல்லாஹ்வை வணக்கம் புரிவோர் ஆகியோர் என்றுரைத்தான் இப்லீஸ். ''என் உம்மத்தில் உனக்கு எத்தனை நண்பர்கள் என்று அடுத்த கேள்வியை கேட்டார்கள். உடனே இப்லீஸ், அநியாயக்கார அரசன், ஆவணச் சீமான், மோசடி வியாபாரி, குடிகாரன், கொலைகாரன், பிறர் பார்ப்பதற்காக முகஸ்துதி அமல்புரிபவன், அனாதைகளின் பொருளை அபகரிப்பவன், வட்டி வாங்குபவன், ஜக்காத் கொடுக்காதவன், பேராசைக்காரன் ஆகிய 10 பேர்கள் என் உற்ற நண்பர்கள் என்று கூறினான்.

## ''சபிக்கப்பட்டவனுக்கு வழங்கிய சலுகை'''

அல்லாஹ்வினால் சபிக்கப்பட்ட இப்லீஸ், இந்த பூமியில் இறங்கியபோது அல்லாஹ்விடத்தில் பின்வருமாறு கேட்டான். அதாவது இறைவா! என்னை நீ சபித்து பூமியில் எரிந்து விட்டாய். எனவே எனக்கு ஒரு வீட்டை ஆக்கிக்கொடு என்றான்.

அல்லாஹ்: குளியலறையை உனக்கு வீடாக ஆக்கினேன் என்றான்.

இப்லீஸ்: எனக்கு உட்காரும் இடம் எங்கே?

அல்லாஹ்: கடைத்தெருக்களும், மேலும் பல பாதைகள் சந்திக்கும் இடமும் ஆகும்.

இப்லீஸ்: எனக்கு உணவைக் கொடு?

அல்லாஹ் : எந்த உணவில் பிஸ்மில்லாஹ் சொல்லப் படவில்லையோ அது உன் உணவாகும்.

இப்லீஸ்: எனக்கு பானம் வேண்டும்?

அல்லாஹ்: போதை வஸ்துக்கள் உனக்கு பானமாகும்.

இப்லீஸ்: எனக்கு அழைப்பாளர் வேண்டும்.

அல்லாஹ்: வீணை வாசிப்பது

இப்லீஸ்: எனக்குரிய ஓதுதல் வேண்டும்.

அல்லாஹ்: கவிதைகளும்,பாடல்களுமாகும்.

இப்லீஸ்: எனக்கு எழுத்து வேண்டும்?

அல்லாஹ்: பச்சைக் குத்தலும், வரைபடங்களுமாகும்.

இப்லீஸ்: எனக்கு ஹதீஸ் வேண்டும்?

அல்லாஹ்: பொய்தான் உனக்கு ஹதீஸ்.

இப்லீஸ்: எனக்கு வேட்டைப் பொருள் (வலை) வேண்டும்.

அல்லாஹ்: உனது வேட்டைப் பொருள் பெண்களாவார்கள்.

இந்த ஹதீஸை கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் அபூ உமாமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

## "ஷைத்தானை பயமுறுத்தும் அமல்கள்"

ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக ஹஜ்ரத் முஆது இப்னு ஜபல்ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துள்ளார்கள். தொழுகை என்பது ஷைத்தானுக்கு நடுக்கம். நோன்பு சிறைத்தண்டனை. ஹஜ் ஷைத்தானுக்கு பித்து பிடிக்க வைக்கும். குர்ஆன் ஓதுதல் அவனுக்கு நெருப்பில் எறிவதைப் போல. தர்மம், வாளால் வெட்டப்படுதல். தவ்பா ஷைத்தானை

உருக்குலைக்கும். தஹஜ்ஜீத் தொழுகை அவனை குருடாக்கும். ஜமாஅத் தொழுகை அவன் தலையை துண்டிக்கும். உலமாக்கள் மஜ்லிஸ் அவன் உலாவருதலை தடுக்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

இப்படி ஷைத்தானின் சாகசங்களை எல்லாம் பட்டியல் போட்டு பல ஹதீஸ்கள் தெளிவுபடுத்தியுள்ளன.

## "இரண்டு கூட்டாளி ஒருமனிதன்

ஷைத்தான் சாதாரண ஆள் இல்லை. உச்சி முதல் உள்ளங்கால்கள்வரை சூழ்ச்சியால் நிறைந்தவன். உலகில் அவனால் கெடுக்கப்பட்டவர்கள் அதிகம் பேர். நமக்கு முன்னால் வாழ்ந்த முன்னோர்களை எல்லாம் தன் மாய வலைக்குள் சிக்க வைத்து ஈமானை பிடுங்கி இருக்கிறான். இதைப்பற்றி அல்லாஹு தா ஆலா தனது புனித வேதத்தில் சூரா யாசீனில் இப்படிச் சொல்கிறான் பாருங்கள்.

"வலகத் அழல்ல மின்கும் ஜிபில்லன் கதீரன் அஃஃபலம் தகூனூ தஃஃகிலூன்"

பொருள்: "நிச்சயமாக உங்களிலிருந்தும் அதிகமான கூட்டத்தினரை (ஷைத்தானாகிய) அவன் வழிகெடுத்து விட்டான் (இதை) நீங்கள் சிந்தித்துணரவில்லையா?

*(அல்குர்ஆன்: அத்: 36,வச:62)*

ஒருமுறை கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள்தனது அன்புத் தோழர்களை நோக்கி, உங்களில் ஒவ்வொருவருக்கும் ஜின்னிலிருந்து ஒரு கூட்டாளியையும், மலக்குகளிலிருந்து ஒரு கூட்டாளியையும் ஏவப்படாமல் இல்லை எனக் கூறினார்கள். இதைக்கேட்ட சஹாபாக்கள் யாரசூலுல்லாஹ்! தங்களுக்குமா? அவ்வாறு சாட்டப்பட்டுள்ளது? எனக் கேட்டார்கள். அதற்கு கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் "ஆம் என் மீது

சாட்டப்பட்டுள்ளது. ஆனால் அல்லாஹ் எனக்கு உதவியதா ஜின்னிலிருந்து என் மீது சாட்டப்பட்டவன் (ஷைத்தா எனக்குப் பணிந்துவிட்டான். எனவே நன்மையைக் கொண் தவிர என்னிடம் தூண்டமாட்டான் என்று பதில் அளித்தார்க

*(அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூ ரலியல்லாஹு அன்ஹு, தகவல்: முஸ்லி*

## "மனிதனைப் பிடிக்கும் மாயவலை"

மர்யம் அம்மையாரையும் அவர்களின் அன்பு மக ஹஜ்ரத் ஈஸா நபியையும் (அலைஹிஸ்ஸலாம்) தவிர வே எந்த மனிதனும் பிறக்கும்போது ஷைத்தான் தீண்டா நிலையில் பிறப்பதில்லை. ஷைத்தானின் தூண்டுதலினா தான் குழந்தை சப்தமிட்டு அழுகிறது என்று கண்மணிந ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கூறினார்கள்

*(அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலியல்லாஹ அன்ஹு, தகவல்: புகாரி, முஸ்லிம்*

மர்யம் அம்மையாரின் தாயின் துஆவின் பலன் இது துஆவின் பரக்கத்தால் இருவரும் ஆரம்பத்தில் தப்பித்தார்கள் மனிதனின் பிறப்பிலிருந்தே ஷைத்தான் தனது கொரில்ல தாக்குதலை துவக்கி விடுகிறான். ஹஜ்ரத் இத்ரீஸ் அலைஹி ஸ்ஸலாம் காலத்தில் சிலை வணக்கத்தை துவக்கி வைத்தான்

பெண்ணாசையின் பிடியில் ஆதமுடைய மகன்கள் காபீல், ஹாபிலை சிக்கவைத்தான்.

மூத்தமகன் காபீல் பெண் வெறியால் இளையமகன் ஹாபீலை கொலை செய்ய வைத்தான்.

உலகின் முதல் கொலையே இதுதான்.

இப்படி மனித குலத்தை பல வழிகளில் வழிகெடுத்து வருகிறான். இன்று நம் காலத்தில் மிக லேசாக அவனின் பாதக

வலை விரிக்கப்பட்டு பறவைகள் பிடிப்பதை போல மனிதர்களை பிடித்து அழித்து வருகிறான். இதனால்தான் அல்லாஹ் நம்மைப் பார்த்து சிந்திக்க வேண்டாமா? என்று கேட்கிறான்.

## "பெண்களும் ஷைத்தான்களும்"

இன்று பெண்கள் மூலம் மனித சமுதாயத்தை மிக இலகுவில் வழிகெடுத்து வருகிறான்.

ஒரு ஹதீஸில் வருகிறது.

"நிச்சயமாகப் பெண்ணொருத்தி ஷைத்தானின் வடிவில் முன்னோக்கி வருகிறாள். அவள் பின்னோக்கி செல்கையில் ஷைத்தானின் வடிவில் பின்னோக்கி செல்கிறாள் என்று கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள். *(தகவல்: முஸ்லிம்)*

எந்த ஒரு ஆண்மகனும் ஒரு அன்னியப்பெண்ணுடன் தனித்திருக்கும்போது அவ்விருவருடன் மூன்றாம் நபராக ஷைத்தான் இல்லாமலில்லை" என்று கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கூறியதாக ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துள்ளார்கள். *(தகவல்: திர்மிதி)*

இப்படி ஷைத்தான் தனது வஞ்சக வலையினால் முன் வாழ்ந்த சமுதாயத்தினரை சிக்கவைத்து சீரழித்தது கொஞ்ச நஞ்சமல்ல.

## "கண்ணீர் வடிக்கும் வரலாறு"

பனீ இஸ்ரவேலர்கள் மத்தியில் இவன் செய்த அட்டகாசம் கொஞ்சநஞ்சமல்ல. அந்தக் கூட்டத்தில் வாழ்ந்த மாபெரும் தவஞானிகளை எல்லாம் வழிகெடுத்து பதம் பார்த்தவன் இவன்.

பனீ இஸ்ராயீல்களில் வாழ்ந்த தவஞானி பர்ஸீஸா என்ற பெரியார் 60 ஆண்டுகள் பகல் முழுவதும் நோன்பிருந்து, இரவு முழுவதும் இறைவழிபாட்டில் இமைமூடாமல் கழித்தவர் இவரின் அழகிய இபாதத் அவனுக்கு பிடிக்கவில்லை. கொதித்தெலுந்த ஷைத்தான் அந்த ஞானிக்கு படுகுழி வெட்டினான் பெண்மூலமாக அவரை கெடுத்து கடைசியில் ஈமானைப் பிடுங்கி மரணிக்க வைத்தான்.

இது எவ்வளவு பெரிய கொடுமை. கண்ணீர் வடிக்கும் வரலாறு இது. காட்டிலே தவம் செய்துகொண்டு தானுண்டு, தன் ரப்புண்டு என்று வணங்கிக் கொண்டிருந்த அமைதியான பெரியாரை வழிகெடுத்து பாதாள படுகுழியில் தள்ளினான் இந்த கொடுமைக்காரன்.

அடுத்து நாட்டிலே கொடிகட்டிப் பறந்த மிகப்பெரிய கல்விமான் பல்காம் இப்னு பாவூராவை அவர் மனைவி மூலம் வழிகெடுத்து நாசபடுகுழியில் தள்ளிவிட்டவன் இந்தச் சண்டாலன்.

## "ஷைத்தானும் அவனின் பட்டாளங்களும்"

ஷைத்தான் தனியாக இருந்து கொண்டு இத்தனை சூழ்ச்சிகளை செய்யவில்லை. அவனுக்கு பெரும் பட்டாளம் இருக்கிறது என்று ஹதீஸில் வந்துள்ளது.

ஒருதடவை கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இப்லீஸை அழைத்து இப்லீஸே! இந்த உலகில் ஷைத்தான்களின் எண்ணிக்கை எத்தனை? என்று கேட்டார்கள். இதை எதிர்பார்த்திராத இப்லீஸ் "யா ரசூலுல்லாஹ்! தாங்கள் கடினமான கேள்வியைக் கேட்டு விட்டீர்கள். நிர்ப்பந்தமாக தாங்களிடம் நான் உண்மையைச் சொல்லவேண்டியது என்பது எனக்கு கஷ்டமாக இருக்கிறது. எனினும் பரவாயில்லை. தாங்கள் கேட்டுவிட்டதால் நான் உண்மையைச் சொல்லிவிடுகிறேன். உலகில் எத்தனை

மனிதர்கள் தோன்றி உள்ளார்களோ, தோன்றி விட்டார்களோ, தோன்றப் போகிறார்களோ, அவர்களைவிட பத்து மடங்கு அதிகம். ஊர்வனங்கள் எத்தனையோ அதனைவிட பத்து மடங்கு அதிகம். பறவைகள், மிருக இனங்கள் எத்தனையோ அதனைவிட பத்து மடங்கு அதிகம் யஃஜீஜ் மஃஜீஜ் கூட்டத்தினர் எவ்வளவோ அவர்களைவிட பத்துமடங்கு அதிகம். மலக்குகள் எத்தனையோ அவர்களைவிட பத்து மடங்கு அதிகம். எனது வமிசத்தாரும், சீடர்களும் இருக்கிறார் கள். எனதருமை வாசக நேயர்களே! என்ன புலம்புகிறீர்கள்? இப்பொழுதே உஷாராகிவிடுங்கள். உங்கள் ஈமானின் பலகீனம் உங்களுக்கு தெரியுமோ இல்லையோ, ஷைத்தானுக்கு கண்டிப்பாகத் தெரியும். அவன் சிந்தனை, குறி எல்லாம் 24 மணிநேரமும் அதன் மீதுதான் இருக்கிறது. ஷைத்தானின் சூழ்ச்சியிலிருந்து எப்படி தப்பிப்பது என்று வழி தேடுகிறீர்களா? ஈமான் மாபெரும் விலை மதிக்க முடியாத பொக்கிஷம் அதை பாதுகாப்பது உங்கள் கையில்தான் இருக்கிறது.

## "ஈமானை பாதுகாப்பது பர்ளுஅய்ன்"

இந்த குழப்பமான ஷைத்தானின் வலை முழுமையாக விரிக்கப்பட்டிருக்கும் மோசமான காலத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். கொஞ்ச கால வாழ்க்கை அது எப்படியும் கழிந்து விடும்.

ஈமானோடு மரணம் வரவேண்டுமே இது சாமானிய காரியமா? இப்ப சொல்லுங்க இந்த காலத்தில் ஈமானை பாதுகாப்பது பர்லா? சுன்னத்தா நபிலா? முஸ்தஹபா? வாஜிபா, முபாஹா? அல்லாஹ் ரசூலின் எச்சரிக்கை உங்கள் உள்ளத்தை உலுக்கி இருக்குமே! ஷைத்தானின் கொரில்லா தாக்குதல் உங்களை புரட்டிப் போட்டிருக்குமே! என்ன பேக்கை தூக்கி விட்டீங்களா? ஜமாஅத்தில் போக. உண்மையில் நீங்க புத்திசாலிகள்தான். ஈமானை பாதுகாப்பது இந்த காலத்தில் பர்ளு அய்ன் என்று புரிந்து கொண்டீர்கள். புறப்படுங்க,

புறப்படுங்க அல்லாஹ்வின் பாதையில். அல்லாஹ் உங்களுக்கு ரஹ்மத் செய்வானாக.

**"உங்க ஈமானுக்கு உழைக்க வேண்டாமா?"**

அருமையானவர்களே! ஈமான் நமக்கு இலவசமாக கிடைத்த மாபெரும் சொத்து. அதை கவனமாக பாதுகாப்பது நமது கடமையல்லவா?

புதுகுடை வாங்கி ஒருமுறை பயன்படுத்திவிட்டு அதை அப்படியே மடக்கி வைத்து விட்டோம். அதை கவனிக்க வில்லை. பல வருடங்கள் உருண்டு ஓடிவிட்டது. ஒருநாள் ஞாபகம் வந்து அதை எடுத்து விரித்தால் குடை விரியுமா இத்து, நஸிந்து வீணாகி விடாதா?

நூறு ரூபாய் குடை வீணாகிவிட்டால் புது குடை வாங்கிவிடலாம். ஈமான் வீணாகிவிட்டால் நிலைமை என்னாகும்?

அதே நிலையில் மௌத்து வந்துவிட்டால் நமது கப்ர், மறுமை என்னாகும்? ஈடு செய்ய முடியாத இழப்பாகி விடுமே.

மௌத்து வருவதற்கு முன்பே ஈமானுக்கு உழைத்து அதை பக்குவப்படுத்த வேண்டாமா?

கொஞ்சம் சிந்தியுங்கள்.

**"ஈமானின் உழைப்பே தஃவத் வேலை."**

இன்று ஈமானை பாதுகாக்க தஃவத் வேலையை விட்டால் வேறு வழி இருக்கா? சொல்லுங்கள் பார்ப்போம். உலகம் முழுவதும் தேடுங்கள். ஈமானை உருவாக்க. ஈமானை வளர்க்க, ஈமானை பாதுகாக்க, ஈமானோடு மரணமாக உலகில் வேறு ஒரு திட்டம் இருக்கா? தப்லீக் ஒரு கூட்டம். உலகில் பல இயக்கம் இருக்கு. அதில் ஒரு இயக்கம்தான் தப்லீக் இயக்கம் என்று அசால்டா பெரும்பான்மை மனிதர்கள் இதை ஒரு

கூட்டமாகவும், இயக்கமாகவும் பார்த்துவிட்டு அதில் இணைந்து ஈமானை பக்குவப்படுத்தாமல் கப்ருக்கு சென்று விடுகிறார்கள். இது எவ்வளவு பெரிய நஷ்டம். ஷைத்தானின் ஏமாற்றம் என்பதை இருப்பவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். இப்போது நடக்கும் வேலை ஒரு தனி கூட்டம் அல்ல, இயக்கம் அல்ல, சங்கம் அல்ல. இன்னும் ஒருபடி மேலே போய் சொன்னால், இது தப்லீக்கே அல்ல. இது ஈமானின் உழைப் பாகும். ஈமானை உசுப்பும் வேலையைத் தவிர வேறில்லை.

## "உலக முஸ்லிம்களே! ஒன்றுபடுங்கள்"

அன்பானவர்களே! இது பொதுவான ஈமானின் உழைப்பு மட்டுமே! இதில் ஈமான் கொண்ட அத்தனை பேர்களும் இணைந்து ஒற்றுமையாக இந்த உழைப்பை செய்து, ஈமானை பக்குவப்படுத்தி பாதுகாத்து ஈமானோடு மரணிக்க வேண்டும்.

"நீங்கள் முஸ்லிமாகாமல் மரணித்து விடாதீர்கள்" என்று நம்மை படைத்த ரப்பே நமக்கு கட்டளை எச்சரிக்கை செய்துவிட்டான். எனவே நாம் ஈமானை பாதுகாக்க தஃவத் வேலையில் முழு மூச்சுடன் இறங்கி உலகம் முழுவதும் அல்லாஹ்வின் பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வுடைய கலிமாவை உயர்த்தி அவனின் தீனை செழிப்பாக்கி நமது ஈமானை பாதுகாத்துக் கொள்ள முன்வரவேண்டும்.

## "உங்க ஈமானைப் பாதுகாக்கவே இந்த உழைப்பு"

இந்த உழைப்பு நமது ஈமானுக்காகத்தான். இந்த உழைப்பில் உள்ள ஒவ்வொரு அசைவுகளும் நமது இஸ்லாஹிற்காகத்தான். அடுத்தவர்களின் ஹிதாயத்துக்காக நாம் ஒரு அடி கூட எடுத்து வைக்கக்கூடாது. அடுத்தவர்களை திருத்தவோ, நேர்வழிபடுத்தவோ ஜமாத்தில் செல்ல அனுமதி இல்லை. அடுத்தவர்களை திருத்தும் வேலையும் அல்ல இந்த உழைப்பு. முற்றிலும் நூற்றுக்கு நூறு ஒவ்வொருவரு

தன்னுடைய ஈமானை பாதுகாக்க உழைக்கும் உழைப்பு இது. அடுத்தவர்களை திருத்த ஜமாத்தில் சென்றால் அது அல்லாஹ்வின் வாக்குறுதியும் இல்லை. ஹிதாயத் அல்லாஹ் தன் கைவசம் மட்டுமே வைத்துள்ளான். யார் எதன் பேரில் உழைக்கிறார்களோ அது அவர்களுக்கு கிடைக்கும். தஃவத் வேலை தன் மீது மட்டும் உழைக்கும் வேலையாகும். தன்னை சீர்திருத்தும் வேலையாகும். அதற்காக தன்னுடைய நேரம், காலம், உடல், பொருள், தில், திமாஹ் இவைகளை எடுத்துக் கொண்டு சொந்த ஊரை விட்டு வெளியேறி அல்லாஹ்வின் பூமியில் அலைந்து திரிந்து இரவில் தொழுது அழுது கண்ணீர் வடித்து தன்னுடைய ஈமானை பாதுகாத்துக் கொள்ள உலகில் உள்ள அனைத்து முஸ்லிம்களும் இன்றே தயாராக வேண்டும். என்ன நீங்கள் தயாராகி விட்டீர்களா?

## "வேண்டும் உங்களுடைய துஆக்கள்"

தஃவத்துடைய உழைப்பு சம்பந்தமாக பலவிதமான அற்புத, அதிசய கருத்துக்கள் இந் நூலில் இடம் பெற்றுள்ளது. தீனுடைய உழைப்பு செய்பவர்களானாலும் சரி, இன்னும் இந்த உழைப்பு செய்யாதவர்களானாலும் சரி, அவர்களுக்குத் தேவையான ஏராளமான அரிய பல அதிசய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. வழமைபோல இது முதல்பாகம். இதில் 100 அதிசய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் படிப்பதற்கு மட்டுமல்ல அமலில் கொண்டு வருவதற்காகத்தான் எழுதி உள்ளேன். தயவு செய்து இந்நூலை அவசியம் வாங்கிப் படியுங்கள். அமல் செய்யுங்கள். அடுத்தவர்களையும் படிக்க தூண்டுங்கள். இன்ஷா அல்லாஹ் தொடர்ந்து 100 அதிசய கருத்துகளுடன் இரண்டாம், மூன்றாம் பாகங்கள் வெளிவரும். அதற்காக எப்போதும் வேண்டும் உங்கள் துஆக்கள்.

காரணம் என்னை சந்திக்கும் வாசகர்கள் கேட்கும் முதல் கேள்வி இப்ப புதுசா என்ன நூல் வெளியிட்டுள்ளீர்கள்? உங்களின் அடுத்த நூல் என்ன?

இந்த ஆர்வம்தான் எனக்கு புதுப் புது தலைப்பில் புத்தம் புதிய நூல்கள் எழுதவேண்டும் என்ற ஆர்வத்தையும், உற்சாகத்தையும் தந்து கொண்டிருக்கிறது.

## ''நெஞ்சார்ந்த நன்றி''

இந்நூலை வெளியிடும் அவிஸோ பப்ளிஷர்ஸுக்கும் என்னைப் பெற்றெடுத்து வளர்த்து சீராக்கி கல்வி புகட்டி இன்றுவரை பாசமழை பொழிந்து வரும் எனது அன்பான, பாசமான பெற்றோர்களுக்கும், என்னை செதுக்கிய ஆசிரியப் பெருந்தகைகளுக்கும், பாசமிகு குடும்பத்தினர்களுக்கும் எனது அன்பார்ந்த வாசகப் பெருமக்களுக்கும் என் எழுத்தை நேசித்து, பாராட்டி விமர்சனம் செய்து என்னை ஊக்குவிக்கும் நண்பர் களுக்கும் எங்களின் தொண்டு நிறுவனமான அவிஸோவின் அனைத்து பொருப்பாளர்கள் உறுப்பினர்கள் அனைவருக்கும் இந் நூலுக்காக எல்லா வகையிலும் உழைத்த உத்தமர் களுக்கும் குறிப்பாக எனக்காக தனது இளமையான வாழ்க் கையை அர்ப்பணித்து எனக்கும், எங்களின் அவிஸோ மன வளர்ச்சி குன்றிய சிறப்புக் குழந்தைகள் உண்டு. உறைவிடப் பள்ளிக்கும், தன்னலமற்ற தூய சேவையால் சமூகப் பணியாற்றி வரும் எனது இனிய ஆருயிர்த் தம்பி எங்கள் அவிஸோ காப்பகத்தின் செயலாளரும், தேசிய இளைஞர் எழுச்சி இயக்கத்தின் மாநில ஒருங்கிணைப்பாளரும், மனித உரிமை கள் கண்காணிப்பகத்தின் மாநிலச் செயலாளருமான அவிஸோ A. ஷேக்அப்துல்லாஹ்,B.A., அவர்களுக்கும் எனது நெஞ் சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு
பெரியார்களின் பாத தூசி
மௌலானா. S.S.முகம்மது ஷைகு அப்துல்லாஹ்
(மன்பயீ, காதிரி) அதிராம்பட்டினம்
செல்: 9842466529

ஹிஜ்ரி: 1434 கி.பி: 2013

# தப்லீகின் அதிசய கருத்துக்கள் ஆயிரம்

## 1. "ஈமானும்- ஈமான்தாரியும்"

அஸ்பாப் அஸ்பாபுஹே, அஸ்பாப் அர்பாப் நஹிஹே'
அஸ் பாப் மே ரடூஹேத்தே ஹுவே
முஸப்பபுல் அஸ் பாபு கே உப்பர் நி கா ரக்னா
இஸ்க்கா நாம் ஈமான்கே'

காரணங்கள் காரணங்கள்தான். காரணங்கள் படைத்த ரப்பு இல்லை. காரணங்களில் இருந்துக் கொண்டு காரணத்தை உருவாக்குபவன் மீது பார்வை வைக்க வேண்டும். இதற்கு பெயர் ஈமானாக இருக்கிறது. *(மதீனா அமீர் செய்யது கான் சாஹிப் (ரஹ்)*

## 2. "ஆறு ஸிபாத்துக்கள் எதற்காக?"

தஃவத்துடைய வேலையில் உள்ள ஆறு நம்பர் என்பது ஆறு சிபத்துகளாகும். இதன் நோக்கம், ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் முழுத் தீன் வரவேண்டும் என்பதுதான். இன்று தீனுடைய வேலை செய்பவர்கள் ஆறு நம்பர் அழகாகப் பேசுகிறார்கள். இன்று ஆறு நம்பர் பேச்சுதான் தீன் ஆகிப் போச்சு. *(ஷாது மௌலானா சாஹிப்)*

## 3. "முஃமினும் - தொழுகையும்"

முஃமின் தொழுகை மூலம் அல்லாஹ்விடம் உதவி வாங்குபவர் ஆவார். ஒருவர் தொழுகையில் இரண்டு தன்மைகள் கலந்து விட்டால் இரண்டு ஹராம் கலந்து விடும். 1. சோம்பல், 2. அவசரத் தன்மை. இதன் காரணமாக

1. வியாபாரம், தொழில்துறைகளில் வட்டி, லஞ்சம், பொய், ஏமாற்றுதல், பதுக்கல் போன்ற வெளிரங்கமான ஹராம் உருவாகிவிடும்.

2. செய்யும் வியாபாரம், தொழில்துறைகளின் மீது அதாவது அஸ்பாபுகள் மீது எகீன் வந்துவிடும். ஒருவர் இந்த நிலையில் தொழுதால் அது வெறும் சடங்கே தவிர தொழுகை இல்லை. இப்படி 40 ஆண்டுகள் ஒருவர் தொழுதாலும் நாளை கியாமத் நாளில் தொழுகாதவர் மத்தியில்தான் இவர் எழுப்பப்படுவார்.

யா அல்லாஹ்! நான் உலகில் தொழுதேன் என்று அல்லாஹ்விடம் வாதாடினாலும் அதற்கு அல்லாஹ் இப்படிச் சொல்வான். அடியானே! நீ என் நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களைப் போல தொழவில்லை. தொழுகையின் மூலம் உதவி வாங்கவில்லை.

## 4. "உயிருள்ள தொழுகை"

நமது அஸ்பாபுகளில் முதல் வஸ்த்து தொழுகைதான். தொழுகையில் உயிர் இருந்தால் உதவி வரும். தொழுகை மூலம் உதவி தேடுங்கள் என்று அல்லாஹ் குர்ஆனில் முஃமின் களுக்கே பிரகடனம் செய்கிறான். எனவே தொழுகையை சடங்காக்காமல் சரியான முறையில் திருத்தி தொழவேண்டும். நமது தொழுகையில் உதவி வேண்டுவோர் உயிருள்ள தொழுகையை தொழ முயற்சிக்க வேண்டும். உயிருள்ள தொழுகை, உதவி வாங்கி வரும் தொழுகையாகும்.

## 5. "பிரகாசமான இல்மு"

இரண்டுவித இல்மு இருக்கிறது.

1. நாவு சம்பந்தப்பட்டது. 2. அறிவு சம்பந்தப்பட்டது. உள்ளத்தில் இறங்காத வெறும் நாவில் மட்டும் தவழும் இல்முக்கு நாளை கேள்வி கணக்கு உண்டு. யாருடைய இல்மு

உள்ளத்தில் இறங்கி உள்ளத்தொடர்பு உள்ளதாகி விட்டதே அதனால் அவருக்கும், உம்மத்திற்கும் பிரகாசமாக இருக்கும் அனைத்து சஹாபாக்களின் இல்முகளும் உள்ளத்தில் தொடர்புடையதாகவே இருந்தது. அதனால் அது உம்மத்தில் பிரகாசித்தது.

## 6. ''ஆபத்தான இல்முதாரிகள்''

உம்மத்தின் குறைகளைப் பார்க்கும் எண்ணத்தில் இல்மை வைத்துப் பார்த்தால் அது உம்மத்தில் பிளவுகளையும், பித்னாக்களையும் உண்டு பண்ணும். இந்த ஸிபத்துள்ள இல்முதாரிகள் உம்மத்தை பிளவுபடுத்தி, பித்னாக்களின் தலைவாசலுக்கே அழைத்துப் போவார்கள். இல்மை வைத்து உம்மத்துகள் மத்தியில் விவாதம் செய்து குழப்பத்தை உண்டாக்குவார்கள். இதனால் உம்மத்துக்கள் மத்தியில் பகைமை வளரும். இவர்கள் ஆபத்தானவர்கள். இன்று உம்மத்தில் ஆபத்தான இல்முதாரிகள் அதிகரித்து வருகிறார்கள். இது பெரும் அபாயமாகும்.

## 7. ''பளாயில் தஃலிமின் சிறப்பு''

தஃவத்துடைய உழைப்பில் பளாயில் தஃலீம் மிக மிக அவசியமான ஒன்றாகும். ஒவ்வொருவரும் பளாயில் தஃலிமில் மிக ஆர்வத்துடன் அமர வேண்டும். பளாயில் ஹராம் மீது வெறுப்பை உண்டாக்கும். கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் விருப்பம் இவர்களுக்கும் வரும். இதுதான் தஃலிமின் -குணம். இந்த குணம் வரவில்லையோ அவர் தஃலிமில் கலந்து கொள்ளவே இல்லை.

## 8. ''மஸாயில் இல்மின் சிறப்பு''

தஃவத்துடைய உழைப்புக்கு மஸாயில் இல்மு பர்லாகும். ஒருவர் 4 மாதம், 40 நாள் ஜமாஅத்தில் செல்கிறார். ஏன் வருஷம் செல்பவராக இருக்கட்டும். அவரிடம் மஸாயில் இல்மு

இல்லாவிட்டால் அவர் பெரும் ஆபத்தில் சிக்குண்டு இருக்கிறார் என்று அர்த்தமாகும். பளாயில் இல்முகளை விரும்புவதின் நோக்கமே மஸாயில் இல்முபடி செயல்பட தான். எனவே மஸாயில் இல்மும், மஸாயில் உடையவருமான ஆலிமும் மிகமிக அவசியமானதாகும். எனவே ஒரு ஆலிமை சந்திப்பது இபாதத்தாகும். தீனுடைய வேலை செய்பவர்கள் அனைவரும் ஆலிம்களின் தொடர்பிலேயே இருக்க வேண்டும். ஆலிம்களின் தொடர்பை அறுத்த தாயீகள் குழப்பத் திலும், பித்னாக்களிலும் சிக்கிக்கொள்வார்கள்.

## 9. "உயிருள்ள திக்ர்"

சஹாபாக்கள் மஸ்ஜிதில் இருந்தாலும், வீட்டில் இருந்தாலும், போர்க்களத்தில் இருந்தாலும், தனிமையில் இருந்தாலும் அல்லாஹ் என்னைப் பார்க்கிறான் என்ற நிலையில் அவர்கள் உள்ளம் உயிருள்ளதாக இருந்தது.

இன்று நமது திக்ர் கிளிப்பிள்ளை போலாகிவிட்டது. இன்று திக்ர் உள்ளத்தில் இல்லை. நாவில் மட்டும்தான் இருக்கிறது. அதனால் அல்லாஹ்வின் தொடர்பு இல்லை.

திக்ருள்ளவர்கள் மீது அல்லாஹ்வின் கை இருக்கிறது. அதனால் திக்ருள்ளவரை யாரும் துன்பம் கொடுக்க முடியாது. நமது எல்லா நிலைகளிலும் ரப்பின் விருப்பம் என்ன என்று தேடி அதை நிறைவேற்றினால் அல்லாஹ்வின் உதவி வரும்.

## 10. "இதமளிக்கும் இக்ராம்"

தீனுடைய வேலை செய்பவர்களிடையே இரத்த பந்து உறவுகளில் மாபெரும் பிளவுகள் ஏற்பட்டு விடுகிறது. இதை சரிசெய்யாமல் ஹஜ்ஜுக்கும் சென்று வருகிறார்கள். இது பெரும் அநியாயமாகும். உறவுகளை துண்டித்து வாழ்பவர் சுவனம் புக மாட்டார்கள் என்று ஹதீஸில் மிகத் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. சஹாபாக்கள் அடுத்த வீட்டார்கள் ஹக்குகளை பேணும் விஷயத்தில் அதிகமாக அல்லாஹ்வை

பயந்தார்கள். இன்று பெற்றோர்களின் நலனில் அக்கறை காட்டுபவர்கள் குறைந்து வருகிறார்கள். இந்த அக்கரையின்மை பெரும் அபாயமாகும். பிறர் ஹக்கை பேணுவதும் அஃ்லாக்கோடு பழகுவதும் மிகமிக அவசியமாகும். அஃ்லாக் பயானில் வந்து விட்டது. வாழ்க்கையில் வரவேண்டும். அஃ்லாக்கை வாழ்க்கையில் கொண்டு வந்தவர்கள்தான் உண்மையான தாயீகளாவார்கள்.

## 11. "இஃ்லாஸே வருக! வருக!"

இன்றுபணம், அறிவு, செல்வாக்கு மூலம் பெருமை அடிப்பவர்கள் வேலையில் புகுந்து விட்டார்கள். இதனால் இன்று வேலை வீழ்ந்து விட்டது.

நான் குர்ஆனில் இன்ன டிகிரி முடித்து உள்ளேன். நான் முப்தி. ஹாபிஸ், பல கலைகள் கற்ற ஆலிம். பல நாடுகளுக்கு ஜமாஅத்தில் சென்று வந்துள்ளேன் . நாங்கள் பழையவர்கள் அந்தக் காலத்தில் இன்ன பெரியாருடன் பல ஜமாஅத்தில் சென்று பாண்டித்துவம் பெற்றவர்கள் என்று பலர் தங்கள் உள்ளத்தில் போட்டு உள்ளார்கள். இது ஆகப் பெரிய முஸீபத்தாகும். தஃ்வத் வேலை மூலம் உடல் ஒன்று சேர்ந்து இருக்கிறது. உள்ளங்கள் ஒன்றுபட்டால்தான் உதவியும் ஹிதாயத்தும் வரும். தஃ்வத் வேலையில் சின்ன அமலோ பெரிய அமலோ ரப்புக்காக மட்டுமே செய்ய வேண்டும். நம்முடைய பகல் முயற்சியும், இரவு முயற்சியும் மனிதர்களுக்கு காட்டுவதற்காக செய்து இருந்தால் மறுமையில் ஒரு அணுவளவேனும் கூலி கிடைக்காது. தீனுடைய வேலை செய்பவர்கள் இது விஷயத்தில் ஏமாந்துவிடக்கூடாது. மிகமிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

## 12. "ஒரே பார்வையில் உம்மத்"

தீனுடைய வேலை செய்யக் கூடியவர்கள் முழு மனித சமுதாயத்தையும் சுத்தமான பார்வையோடு பார்க்க வேண்டும்

முழுமையான வெள்ளைத் துணியைப் பார்ப்பதுபோல பார்க்க வேண்டும்.

கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் உம்மத்துகள் அவர்கள் எப்படி இருந்தாலும் சரி அவர்களை பார்க்கும் நமது கண்களை பரிசுத்தமாக இருக்க வேண்டும். எல்லா கொள்கை, தரப்பு உள்ளவர்களையும் ஒரே பார்வையில் பார்க்க வேண்டும். உம்மத்தார்களிடம் ஏற்படும் கருத்து வேறுபாடுகள் ரஹ்மத்தாகும்.

நான்கு மத்ஹபுகள் கருத்து பிளவுகளே தவிர, அது உம்மத்தை பிளக்கவில்லை. நாம் முழுக்க முழுக்க நபியின் உம்மத்தாவோம். இந்த வேலையை தப்லீக் என்று சொல்வது பிதஅத் தாகும். காபிர்களைக் கூட மட்டமாக காபிர்கள் என்று பழித்து, இழித்து கூறவேண்டாம் என்று குர்ஆன் நமக்கு அறிவுரை வழங்குகிறது.

## 13. "உழைப்பும்- எதிர்ப்பும்"

இந்த உழைப்புக்கு எதிர்ப்புக் காட்டக் கூடியவர்களை தட்டிக் கழிக்கக்கூடாது. அவர்களை ஒதுக்கியும் வைத்துவிடக் கூடாது. அவர்களுடன் ஆறு சிபாதுக்களோடு நல்ல முறையில் பழகவேண்டும். அந்த சிபாத்துகள் மூலம் அவர்கள் வேலைக்கு வருவார்கள். அப்படி நீங்கள் அவர்களோடு பழகி ஆறு சிபாத்துகளை காட்டவில்லையானால் நீங்கள் கெட்டு வீணாகிப் போய்விடுவீர்கள். ஆறு சிபாத்துகளை காட்டும் கார்கூன்கள் இந்த உழைப்பில் அதிகரிக்க வேண்டும். போலி ஆறு சிபாத்துகளுடையவர்கள் தானும் கெட்டு உம்மத்தையும் கெடுத்துவிடுவார்கள்.

## 14. "உள்ளங்கள் ஒன்றுபட ஒரேவழி"

உஹது போர்க்களத்தில் கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் சில சஹாபாக்களை ஒரு

மலைக்குன்றின் பக்கம் காவலுக்கு வைத்தார்கள். கனீமத் பொருட்களைப் பார்த்ததும் அதை எடுத்துக் கொள்ளும் எண்ணத்துடன் கொஞ்சம்பேர் கட்டளையை மீறி பொருக்கப் போனார்கள். இதை தடுத்தவர்களிடம் வாதாடினார்கள். இதனால் ஏற்பட்ட பாதிப்பு 70 சஹாபாக்கள் ஷஹீதானார்கள்.

இந்த விஷயம் கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு தெரிய வந்ததும் கோபத்தால் அவர்கள் கன்னம் சிவந்தது. இதைக் கண்ட அல்லாஹ் நபியைப் பார்த்து அந்த தவறு செய்த சஹாபாக்களோடு நான்கு தன்மைகளோடு நடந்து கொள்ளும்படி ஏவினான்.

1. மன்னித்து விடுங்கள். 2. நீங்கள் அவர்களுக்காக இஸ்திக்பார் செய்யுங்கள் 3. அவர்களுக்காக துஆ செய்யுங்கள். 4. அவர்களோடு அனுசரித்து மசூரா செய்து முடிவு செய்யுங்கள்.

இந்த முறைதான் நமக்கும். இப்படி செய்தால் கண்மணிநபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கும், சத்திய சஹாபாக்களுக்கும் இருந்த ஒற்றுமை போல வேலை வளரும். இல்லாவிட்டால் உள்ளம் உடைந்த வண்ணமே வேலை நடக்கும். எச்சரிக்கை. இன்று பெரும்பான்மையான ஊர்களில் உள்ளம் உடைந்தவர்கள் அதிகம் உள்ளார்கள். உள்ளத்தை உடைப்பவர்கள் ஒவ்வொரு ஊரிலும் உள்ளார்கள். இதன் காரணமாக வேலை உடைந்த நிலையில் சிதறிக் கொண்டிருக்கிறது. சம்பந்தப்பட்டவர்கள் உடனடி தவ்பா செய்து திருந்த வேண்டும். இல்லாவிட்டால் வேலையிலிருந்தே ஆபத்து ஏற்படும்.

## 15. முஹப்பத்தே துன்யா''

வேலையில் பிளவு கூடாது. துன்யாவின் முஹப்பத் வரக் கூடாது. உஹது பாதுகாப்பு படையினர் இரண்டாகப் பிரிந்ததற்கு காரணம் கனீமத் பொருட்கள்தான். கனீமத் மட்டும்

இல்லாவிட்டால் அவர்கள் மாறி இருக்க மாட்டார்கள். விவாதம் செய்து இருக்க மாட்டார்கள். இதுபோல இந்த வேலையில் நமக்கு துன்யாவுடைய முஹப்பத் வரக்கூடாது. அப்படி வந்து விட்டால் அதற்கு தோதுவாக குர்ஆன், ஹதீஸ் தயார் செய்து பேச முன்வந்து விடுவார்கள். எனவே வேலையை வேலை யாகச் செய்ய வேண்டும். துன்யாவின் முஹப்பத்தில் சிக்கி சொந்த அபிப்பிராயங்களை புகுத்திவிடக்கூடாது. துன்யாவின் முஹப்பத்துடைய தீன்தாரிகள் வேலையில் சொந்த அபிப்பி ராயங்களை உருவாக்கி மக்களிடையே விவாதம் செய்ய துவங்கி விடுவார்கள். இவர்கள் அதிகரித்தால் வேலை சடங் காகும்- உதவிகள் அறுந்துவிடும். ஒற்றுமை சீர்குலையும் எச்சரிக்கை.

## 16. "செல்வத்தின் சாவிகள்"

தஃவத்துடைய உழைப்பில் ஈடுபடுபவர்கள் செல்வந்தர்களின் தொடர்பை குறைக்க வேண்டும். அப்படிக் குறைக்காவிட்டால் இவர் ஆலிமாக இருந்தாலும் சரி, தாயீயாக இருந்தாலும் சரி இவரை செல்வத்தின் சாவியாக்கிவிடும். இதனால் இவர்களிடமிருந்து ரூஹானியத்தான பேச்சு குறைந்து விடும். தொழுகையிலும் ரூஹானியத் குறைந்து விடும். தீனுடைய வேலை செய்பவர்கள் ஒருபோதும் செல்வத்தின் சாவிகளாக இருக்கக் கூடாது. அப்போதுதான் அமல்கள் பாதுகாக்கப்படும்.

## 17. "உம்மத்தை கூறு போடாதீர்கள்!"

தஃவத்துடைய வேலையில். உம்மத்தைக் கூறுபோடக் கூடாது. ஆலிம்கள், டாக்டர்கள், இன்ஜினியர்கள், செல்வந் தர்கள், ஏழைகள், மாணவர்கள் என்று தனித் தனியாகப் பிரிக்கக் கூடாது. தஃவத் வேலையின் அசல் நோக்கமே உம்மத்துக்களை ஒன்றுபடுத்துவதுதான். பிரிப்பது அல்ல. அனைவருக்கும் ஈமான் ஆமால்தான் வேண்டும். உம்மத்தைப் பிரித்துப் பார்க்காதீர்கள்.

மூஆத் இப்னு ஜபல் (ரலி) முப்தியாக இருந்தார்கள் பிலால் (ரலி) அடிமையாக இருந்தார்கள். அப்துர் ரஹ்மா இப்னு அவுபு (ரலி) செல்வந்தராக இருந்தார்கள் இப்ப சஹாபாக்கள் பல தரப்பட்டவர்களாக இருந்தார்கள்.எனவே இந்த வேலையில் அனைவர்களையும் ஒன்றுபடுத்தி வேலை வாங்கப்பட்டது. மாறாக தரம் வாரியாக தனியாகப் பிரிக்க வில்லை. எனவே நாம் இந்த வேலையில் உம்மத்தை உடைத்துப் பிரிக்கக்கூடாது.

## 18. ''பித்னாக்களை ஒழிக்கும் வேலை''

தீனுடைய வேலை செய்யக்கூடியவர்கள் தம் மனதி தப்லீக் வேலைதான் அசலான வேலை. மற்ற வேலைக எல்லாம் வேலையே அல்ல என்று தப்பான எண்ணத்தில் இந் வேலையில் ஈடுபடக்கூடாது. எந்த தனிப்பட்ட நபரையும் இயக்கத்தையும், புறக்கணிக்கக் கூடாது. எல்லோரிடத்திலு அஃலாக்கை காட்டனும்.

ஒருவர் நற்குணத்தோடு இருந்தால் இவர் ஆறு சிபத்தில் ஒன்றில் இருக்கிறார் என்று நினைக்கனும். ஒருவர் திக் செய்யக்கூடியவராக இருந்தால் ஆறு சிபத்தில் ஒன்று இவரிடம் இருக்கிறது இவர் தீனுக்கு உறுதுணையா இருக்கிறார் என்று நினைக்க வேண்டும். தரீக்காவா இருக்கட்டும், தவ்ஹீதாக இருக்கட்டும். தீனின் அடிப்படையில் உள்ள எந்த இயக்கமாக இருக்கட்டும் அனைவர்களு ஒன்றுதான் என்று நினைக்க வேண்டும். எல்லோரையு மதிக்கனும், எல்லோரும் தீனுக்கு உதவியாக இருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டும். உலகில் உள்ள அனைத்து பித்னாக்களையும் ஒழிக்க வேண்டும். அதற்காக ஒற்றுமை யுடன் உழைக்க வேண்டும். தீனுடைய வேலை செய்யக் கூடியவர்கள் பித்னாக்களை ஒழிக்க கூடியவர்களே தவி பித்னாக்களை விளைவிக்கக் கூடியவர்கள் அல்ல.

## 19. "தஃவத் என்ற கிணறு வெட்ட வாருங்கள்"

தீனுடைய வேலை செய்யக் கூடியவர்கள், தஃவத் என்ற கிணறு வெட்டுகிறார்கள். நம்முடைய வேலை ஆழமான கிணறு வெட்டுவதுதான். காரணம் மக்கள் அதன் மூலம் பிரயோசனம் அடைய வேண்டும். அந்த கிணற்றில் மக்களில் பலர் பல குழாய்களைப் போட்டு தண்ணீர் எடுக்கிறார்கள்.

உதாரணமாக, மதரஸா, தரீக்கா, திக்ருடைய சபைகள் கான்காஹ். இன்னும் இதுபோன்ற அமைப்புகள் இவைகள் மூலம் உம்மத் பலன்பெறுகிறார்கள். ஆனால் நாம் ஆழமாக கிணறு வெட்டிக்கொண்டே போய்க் கொண்டிருக்க வேண்டும். இதுதான் நமது வேலை. எப்படியோ உம்மத் பலன் பெறட்டும். அதற்காக நாம் பொறாமை கொள்ள வேண்டாம். நாம் நமது வேலையைச் செய்து கொண்டே இருக்க வேண்டும் இஸ்த்திகாமத்தாக.

## 20. "அல்லாஹ்வின் வஃதா"

கியாமத் நாள்வரை முழு உம்மத்தின் பாதுகாப்பு இந்த முபாரக்கான தஃவத் உழைப்பில்தான் இருக்கிறது. அல்லாஹ்வின் வஃதாவும் இந்த உழைப்பில்தான் இருக்கிறது. இந்த வேலையின் அசல் கவலை முழு உம்மத்தையும், முழு தீனில் இணைக்க வேண்டும். சஹாபாக்கள் பிள்ளைகள் யாரும் தெருவில் கையேந்தவில்லை. அல்லாஹ்வின் வஃதா அது. மாறாக கிஸ்ரா, ரோம், கைஸர் மன்னர் வீட்டுப் பிள்ளைகள் தெருவில் கையேந்திப் பிச்சையெடுத்தார்கள். இதற்கு வரலாறு இருக்கிறது.

அல்லாஹ்வின் வஃதாமீது எகீன் வரவேண்டும். முழு எகீனோடு இந்த உழைப்பை முழுமூச்சுடன் செய்ய வேண்டும்.

## 21. "கார்குஜாரி சொல்லுங்கள்"

"கார்குஜாரி" என்ற வார்த்தை பாரிஸி வார்த்தையாகும். கார்- உழைப்பு, குஜாரி- என்ன உழைப்பு செய்தோம். இதுதான் கார்குஜாரி. கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் தமது வாழ்நாளில் 150 ஜமாஅத்துகளை தயார் செய்து அனுப்பி உள்ளார்கள். ஜமாஅத் உழைத்துவிட்டு திரும்பிய பிறகு விசாரிப்பார்கள். பின்பு திருத்தம் செய்து கொடுப்பார்கள். இதனால் இது சுன்னத்தான அமலாகும்.

இந்த சுன்னத்தை ஹயாத்தாக்க ஜமாஅத்தில் கார்குஜாரி வைக்கப்பட்டிருக்கிறது.

குறிப்பு: நாளை மறுமை நாளில் ஒவ்வொரு மனிதரும் தனித் தனியாக அல்லாஹ்விடம் கார்குஜாரி சொல்ல வேண்டும்.

## 22. "குர்ஆனின் கடமைகள்"

குர்ஆன் அல்லாஹ்வின் அற்புத வேதமாகும். குர்ஆன் ஓதுவதற்கு மட்டுமல்ல, அது முழுமையான வாழ்க்கை திட்டமாகும். குர்ஆனுக்கு செலுத்த் வேண்டிய ஐந்து கடமைகள் இருக்கின்றன. அவைகளை ஒவ்வொரு முஸ்லிம்களும் பேணவேண்டும்.

1. குர்ஆனை கற்றுக் கொள்வது
2. தஜ்வீதுடன் அதனை திருத்தி ஓதுவது
3. குர்ஆனை மனனம் செய்வது
4. அர்த்தம் விளங்கி அமல் செய்வது
5. அதனைப் பரப்புவது.

## 23. பிஃக்ர் வந்தது எப்படி?

ஹஜ்ரத் இஸ்மாயில் (அலை) அவர்களின் பரம்பரையின ருக்கு தீனுடைய கவலை இருந்தது. அவர்கள் தனித்திருந்து,

விழித்திருந்து, பசித்திருந்து பல தியாகங்கள் செய்துள்ளார்கள். அதன் மூலம் பல பதவிகளை அடைந்தார்கள். அந்தப் பரம்பரையில் வந்த குறைஷியர்களில் சிலர் சிலை வணக்கம் செய்ய ஆரம்பித்தார்கள். இதைக் கண்டு பிக்ர் ஏற்பட்ட கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் ஹீரா குகையில் ஆறு மாதங்கள் தொடர்ந்து ஃபிக்ரில் இருந்தார்கள். பிறகு மீண்டும் அவர்களைப் ஃபிக்ரின் பக்கம் திருப்பினார்கள். வஹியும் வந்தது. அவர்களுக்கு தீனும் வந்தது. அதைத்தான் இன்று முழு உம்மத்தின் ஃபிக்ரின் ஒரு தொழுகைக்குப் பிறகு சில நிமிடங்கள் ஃபிக்ரில் அமர்ந்து சிந்திருக்கின்றோம்.

## 24. "அல்லாஹ்வின் நேரடி உதவி"

முந்தைய நபிமார்கள் தங்களுக்கு துன்பம் வந்தபோது அல்லாஹ்விடம் முறையிடுவார்கள். அவர்கள் அல்லாஹ்விடம் முறையிடாதவரை உதவி வராது. அவர்களின் முறையீட்டை ஏற்றுக்கொண்ட பின்புதான் பாவம் செய்த மக்களை அழிப்பான். ஆனால் நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் துன்பப் பட்டவுடனே, அல்லாஹ்வே நேரடியாக உதவி செய்வான். உதாரணம்: அபூலஹப் நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் மீது மண் வீசிய சம்பவம் தாயிப் சம்பவம்.

## 25. "துன்பங்களின் உச்சக்கட்டம்"

முந்தைய எல்லா நபிமார்களைவிட அதிகமான துன்பங்களும், கஷ்டங்களும் எனக்கு கொடுக்கப்பட்டிருக் கின்றன என்று நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஆனால் முந்திய நபிமார்களோ பலவிதமான துன்பங்களுக்கு ஆளாக்கப்பட்டுள்ளார்கள். அவர்கள் மேல் பலவிதமான கொடுமைகள் நிகழ்த்தப்பட்டன.

சில நபிமார்களை ரம்பத்தால் அறுத்துள்ளார்கள். இரு துண்டுகளாக வெட்டப்பட்டுள்ளார்கள். இன்னும் இது போன்ற பல வன் கொடுமைகளுக்குள்ளாக்கப்பட்டுள்ளார்கள்.

நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு பலவிதமான துன்பங்கள் கொடுக்கப்பட்டாலும் அவைகள் வெறும் உடலோடு சம்பந்தப்பட்டதுதான். அதைவிட கொடுமையான துன்பங்கள் உள்ளத்திற்கு கொடுக்கப்பட்டு உள்ளது. இந்தத் துன்பம் மிகப் பெரிய துன்பமாகும். நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு கொடுக்கப்பட்ட உள் காயங்கள், துன்பங்கள், கொடுமைகள் உலகில் யாருக்கும் கொடுக்கப்படவில்லை. அந்த அளவு கஷ்டங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## 26. ''சுவன மாளிகை யாருக்கு?''

சுவனத்தில் ஆக கீழ்நிலையில் உள்ள ஒரு முஃமினுக்கு தூய முத்துக்களால் ஆன ஒரு மாளிகை கிடைக்கும். அந்த மாளிகையில் 70 ஆயிரம் அறைகள் இருக்கும். அதில் 70 ஆயிரம் வாசல்கள் இருக்கும். ஒவ்வொரு அறையிலும் 70 ஆயிரம் மலக்குகள் நின்றுகொண்டு வரவேற்பார்கள் என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹீ அவர்கள் அறிவிக்கின்றார்கள்.7 லட்சம் ஸ்குயர் பிட்டு ஒரு வாசலுக்கு மட்டும் 7 ஏக்கர் இடம் வேண்டும். ஒரு ரூம் (அறை) மட்டும். முழு தமிழ்நாடு அளவுக்கு இருக்கும். இப்படி 70 ஆயிரம் என்றால் இப்போது உள்ள முழு உலகமும் போதாது.

இந்தப் பாக்கியம் யாருக்கு?

யாரிடம் இரண்டு ஸிபத்துகள் உள்ளனவோ அவருக்கு.

1. தீனில் இஸ்திகாமத்தாக இருப்பது

2. தீனில் பொறுமையாக இருப்பது.

இஸ்த்திகாமத்தும், பொறுமையும் யாரிடம் இருக்குமோ அவருக்கு இந்த சுவனத்தை அல்லாஹ் வழங்குவான்.

## 27. "நபி (ஸல்) டீ குடித்தார்களா?"

துபையில் வசிக்கும் ஒரு ஜமாஅத் சாத்தி, ஸ்லோன் இஸ்மாயில் ஹஸ்ரத் அவர்களிடம் ஹஜ்ரத் அவர்களே! பால் குடித்தால் அதற்காகவே உள்ள சுன்னத்தான துஆவை ஓதுகிறோம். "டீ" குடித்தால் என்ன துஆ ஓதவேண்டும்? என்று கேட்டார்.

அதற்கு ஹஜ்ரத் அவர்கள் "இஸ்திக்பார் ஓது" என்றார்கள். இது கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கற்று தந்த துஆவா? என்று திருப்பிக் கேட்டார் இல்லை. அவர்கள் டீ குடிக்கவே இல்லை. சுன்னத்திற்கு மாற்றமாக டீ குடிப்பதால்தான் இந்த இஸ்திக்பார் என்று பதிலளித்தார்கள்.

## 28. "இலவச தட்டுக்கள்"

இன்று முஸ்லிம்கள் வீடு தட்டப்பட்டாலே சிலவுதான். உதாரணமாக பால்காரன், பேப்பர்காரன், கேஸ்காரன், E.B.காரன். ஆனால் ஒரே ஒரு தட்டுதான் இலவசம். அது அல்லாஹ்வுக்காக ஜமாஅத்தினர்கள் தட்டும் தட்டுக்களாகும்.

## 29. "கூலி கேட்காத வேலை"

உலகத்தில் எந்த ஒரு வேலையும் சும்மா செய்வது இல்லை. ஆதாயம் இல்லாமல் யாரும் ஒரு அடி எடுத்து வைப்பது இல்லை. ஆனால் எந்தவித உலக பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் ஒரு கூட்டம் அலைந்து திரிந்து உலகம் முழுவதும் வேலை செய்கிறது என்றால் அது தப்லீக் ஜமா அத்து தான் என்று எகிப்து நாட்டைச் சேர்ந்த ஒருவர் கூறினார்.

## 30. "எல்லோரும் செய்யும் வேலை"

ரயில் தண்டவாளத்தில் ரயிலும் ஓடும், பூட்சும் ஓடும் டெக்கும் ஓடும். அதுபோல இந்த தஃவத்துடைய வேலை ரயில் தண்டவாளம் போல இதில் ஆலீம்களும் வேலை செய்யலாம். அவாம்களும் வேலை செய்யலாம். எழையும் வேலை செய்யலாம். பணக்காரர்களும் வேலை செய்யலாம்.

## 31. "தவறான அபிப்பிராயம்"

உலகில் தவறான அபிப்பிராயம் ஒன்று இருக்கிறது பணம், காசைக் கொண்டு எல்லாம் ஆகும். பணம் பேலன்ஸ் இருக்க வேண்டும். மின்னல் ஹபீப் இருந்தால் வாழ்க்கை செழிப்பாகும். இது தவறான கருத்தாகும்.

ஏ.டி.எம். கார்டு இருக்கு, வேல்ட் லெவலில் நான் நம்பர் ஒன்னாக இருந்தாலும் அல்லாஹ்வின் வெறுப்பு மட்டும் இருந்தால் அவரை அதிலே வைத்தே அல்லாஹ் நாசப்படுத்துவான். காசு, பணம் இல்லை. வெறும் பாகெட் மட்டும்தான் இருக்கு ஒருவருக்கு. ஆனால் அவரிடம் அல்லாஹ்வின் அன்பு மட்டும் இருந்தால் எந்த சாதனமும் இல்லாமல் அவரை செழிப்பாக்குவான். எனவே தீனுடைய வேலை செய்யக்கூடியவர்கள் அல்லாஹ்வின் மீது முழுமையான தவக்குல் வைத்து அல்லாஹ் என் வாழ்க்கையை சரியாக்குவான் உள்ளத்தில் எகீன் கொள்ள வேண்டும்.

## 32. "காரூனும்- காரூனியத்தும்"

காரூன் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களின் சிறிய தந்தை வழிவந்த சகோதரன் ஆவான். பரிசுத்தக் குர்ஆனின் சூரா கஸஸின் எட்டாம் ருகூஉ முழுவதும் அவனுடைய சரித்திரத்தை மட்டும் அல்லாஹ் கூறி காட்டியுள்ளான். ஏராளமான செல்வங்களுக்கு சொந்தக்காரனாக அல்லாஹ் அவனை ஆக்கினான்.

செல்வ செருக்கினால் அல்லாஹ்வுக்கு மாறு செய்தான் பூமியில் புதையுண்டான். அவனுடன் அனைத்துச் செல்வங்களும் புதையுண்டன. இவன் அழிக்கப்பட்டதற்கு காரணம், அவன் சொன்ன ஒரு வார்த்தைதான்.

"எனக்கோ இப்பொருள்கள் எல்லாம் என்னுடைய சொந்த திறமையினால் கிடைத்தவை. அதாவது இவையெல்லாம் எனது அறிவுத் திறமையால் சேர்த்தேனே தவிர இதில் எந்தவித மறைமுக உதவியும் இல்லை அல்லது மற்றவர்கள் எவருடைய பங்கும் இதில் இல்லை."

இவன் சம்பந்தமாக ஹஜ்ரத்ஜீ முஹம்மது யூசுப் (ரஹ்) அவர்கள் கூறும்போது... காரூன் மௌத்தாகிவிட்டான். காரூனியத் கியாமத் நாள்வரை இருக்கும் என்றார்கள்.

## 33. "இஸ்ரேலின் அறிக்கை"

தப்லீக் ஜமாஅத்தைக் கொண்டு எங்கள் அரசாங்கத்திற்கு எந்தவித பயமும் இல்லை. ஆனால் ஒரே ஒரு பயம்தான் இருக்கிறது. அந்த பயம் என்னவென்றால்... உலக மக்கள் அனைவர்களையும் முஸ்லிம்களாக்கி விடுவார்கள். இதை தவிர வேறு பயம் இல்லை என்று இஸ்ரேல் அரசாங்கம் அறிக்கை விட்டிருக்கிறது.

## 34. "புத்திமதி கூறிய ஆலிம்ஷா"

இன்றைய தமிழ்நாட்டின் தப்லீக் அமீர் சாஹிப் அதிராம்பட்டினம் அப்துல்காதர் ஆலீம்ஷா அவர்களிடம் ஒருவர் வந்து தமிழ்நாட்டின் பிரபல்யமான ஒரு ஊரை குறிப்பிட்டு இந்த ஊர் மக்களுக்கு தப்லீக் தேட்டம் இல்லை. வேலை செய்ய முன்வருவதில்லை. இல்முடைய கர்வம் அதிகம் இருக்கிறது அவர்களுக்கு என்று தனது ஆதங்கத்தைச் சொன்னார்.

இதைக்கேட்ட ஆலீம்ஷா அவர்கள், அவரிடம் இல்மு நிறைந்த அந்த ஊர்மக்களைப் பற்றி தவறாக கூறக் கூடாது. குறை சொல்வதும் கூடாது. இன்ஷா அல்லாஹ் அவர்களும் தீன் வேலையில் ஈடுபடுவார்கள். அதற்காக துஆ செய்து கொண்டிருங்கள் என்று புத்திமதி கூறினார்கள்.

## 35. ''அபிப்பிராயம் கேளுங்கள்''

ஜமாஅத்தில் வந்தவர்கள் அனைவரிடமும் அபிப்பிராயங்கள் கேட்க வேண்டும். அதனால் அவர்கள் உள்ளம் சந்தோஷம் அடையும். இஜ்த்திமாயி குலூப் உண்டாகும். மாறாக யாரையும் மட்டம் தட்டியோ, தட்டிக் கழிக்கவோ கூடாது. மசூராவில் சிலரின் அபிப்பிராயங்கள் நிராகரிக்கப்படுகிறது. அதனால் அவர்கள் உள்ளங்கள் உடைந்து விடுகிறது. ஷைத்தான் உள்ளத்தில் தப்லீக் பற்றி வெறுப்பை ஏற்படுத்தி விடுகிறான். ஊர் திரும்பிய பிறகு வேறு ஒரு இயக்கத்திலே சேர்ந்து கொள்கிறார்கள். தப்லீக் பற்றி தவறாக பேசி வருவார்கள். எனவே வேலை செய்பவர்கள் கூட அழைத்துப்போகும் மக்களிடம் அன்பாகவும், அஃலாக்கோடும் அபிப்பிராயங்களை மதித்தும் நடந்து கொள்ள வேண்டும்.

## 36. ''வலீ'' யாக வேண்டுமா?

அல்லாஹ்வின் படைப்புகளில் ஒன்று ''பன்றி'' மனிதர்கள் இதை கேவலமாக நினைக்கின்றனர். அல்லாஹ்வின் எந்தப் படைப்புகளையும் கேவலமாக நினைக்க மனிதர்களுக்கு உரிமை இல்லை. ஒரு சமயம் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தோழர்கள் பன்றியை பற்றி அசிங்கமாகப் பேசியபோது, அதற்கு மறுப்பு தெரிவித்து, அதன் பற்களைப் பாருங்கள் எவ்வளவு வெண்மையாக இருக்கிறது என்று பாராட்டிச் சொன்னார்கள். பன்றிக்கு இரண்டு ஸிபத்துகள் இருக்கின்றன. அந்த இரண்டு தன்மைகள் மனிதரிடம் வந்தால் அவர் 'வலீ' (இறைநேசர்) ஆவார்.

1. பார்வை எப்போதும் கீழ்நோக்கியே வைத்து பெருமையின்றி இருக்கும்.

2. தன்னை எப்போதும் கேவலமாகவே நினைக்கும்.

## 37. ''ரஹ்மத்தே- ஹபீபே!''

எல்லா நபிமார்களையும் அல்லாஹ் தனது ரஹ்மத்திலிருந்து படைத்தான். ஆனால் எங்கள் உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை ரஹ்மத்தாகவே படைத்தான். எங்கள் உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பார்த்து அரபு மக்கள் பைத்தியம் என்றார்கள். ஆனால் அல்லாஹு சுப்ஹானஹுவ தாஆலா என் ஹபீபே என்றான்.

## 38. ''நிய்யத்தை சரி செய்யுங்கள்''

ஜமாஅத்தில் பேசினாலும், நிய்யத்தை சரி செய்யுங்கள், பேசாவிட்டாலும் நிய்யத்தை சரி செய்யுங்கள். பேசாதவர்கள் ஏன் நிய்யத் சரி செய்ய வேண்டும்? பேசுபவர்களை தவறாக நினைக்காமல் கேட்க வேண்டும் என்பதற்காக, ஷைத்தான் அமலில் குழப்பத்தை உண்டு பண்ணமாட்டான். நிய்யத்தில் குழப்பம் செய்வான். உதாரணமாக: ஒருவர் தொழுது கொண்டிருக்கும்போது தொழலாமா? வேண்டாமா? என்று தவறாக நினைக்க வைத்து நிய்யத்தை பாழ்படுத்துவான் இந்த நிய்யத் ஒருவருக்கு வந்தால் அவர் தொழுகை கூடாது.

## 39. ''தர்த்தீபாக செய்யுங்க''

கௌதுல் அஃலம் முஹைய்யிதீன் அப்துல்காதர் ஜீலானி (ரஹ்) அவர்கள் சொன்னார்கள்.

ஒரு முஸ்லிம் முதலில் பர்லான காரியங்களைச் செய்ய வேண்டும். அடுத்து சுன்னத்து. அடுத்து முஸ்தஹபு. அடுத்து

நபில் இப்படி தர்த்தீபாக அமல் செய்யனும். இதில் ஷரீஅத் முறைப்படி செய்ய வேண்டும். இதில் ஒன்றை மட்டும் பிடித்துக் கொண்டு மற்றதை விடுவது கூடாது.

## 40.''தகப்பல் மின்னா''

நாம் எந்த ஒரு அமலைச் செய்தாலும் அது அல்லாஹ் விடம் ஏற்றுக் கொள்ளப்படும் என்ற நம்பிக்கையில் செய்ய வேண்டும். ஹஜ்ரத் இப்றாஹிம் (அலை) அவர்கள் கஃபத்துல்லாஹ்வைக் கட்டும்போது ''தகப்பல் மின்னா'' என்று சொல்லி சொல்லியே ஒவ்வொரு கல்லாக எடுத்து வைத்தார் கள். அந்த அளவு அவர்கள் அல்லாஹ்விடம் நம்பிக்கை வைத்து அமல் செய்தார்கள். ஒவ்வொரு கல்லையும் அல்லாஹ் விடம் சமர்ப்பித்தார்கள். அல்லாஹ்வும் அதை அங்கீகரித்துக் கொண்டான். தீனுடைய வேலை செய்யக் கூடியவர்கள் எந்த ஒரு அமலாக இருந்தாலும் அதை செய்யும் போது அல்லாஹ் ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கையோடு அல்லாஹ்விடம் சமர்ப்பிக்க வேண்டும்.

## 41. ''நம் ஹிதாயத்திற்காக''

கொர்க்கா (இரவு காவலர்) இரவு முழுவதும் தெருக் களில் உஷார் என்று கூறி கொண்டு சுற்றி வருவார். எதற்காக தான் தூங்காமல் இருப்பதற்காக. அதுபோலத்தான் நாம் தஃவத் உழைப்பில் உலகம் முழுவதும் சுற்றி வருகிறோம். எதற்காக நாம் ஏமாறாமல் இருப்பதற்காக, நம்முடைய ஹிதாயத்திற்காக.

## 42. ''6-க் ஸ்அப்'' குடியுங்க

அதிரை அப்துல்காதர் ஆலிம் ஷா அவர்கள் ஜமாஅத்தில் வந்த சாத்தி ஒருவர் பகல் உணவு பிரியாணி சாப்பிட்டுவிட்டு ஜமாஅத்தில் இருக்கும் ஒரு மௌலானாவிடம் தமாஷாக உணவுகளிலே மேலான உணவான செய்யது தாம். பிரியாணியை ஒருபிடி பிடித்து விட்டேன். எனவே எனக்கு நீங்க சவனாப் வாங்கி தருவீங்களாம் என்றார்.

இதைக்கேட்ட மௌலானா தமாஷாக, ஷவனாப் வாங்கித் தரமாட்டேன். ஸிக்ஸப் (ஆறு நம்பர்) வாங்கித் தருகிறேன் குடியுங்கள் உணவு செரித்திடும் என்றார்.

## 43. "ஆஃமாலா? அஸ்பாபா?"

இன்று மக்களிடம் ஆமால்களில் நம்பிக்கை இல்லை. மாலில் (பொருள்) நம்பிக்கை வந்துவிட்டது. அஸ்பாபுகள் லாபமும் கொடுக்கும். நஷ்டமும் கொடுக்கும் கேரண்டி இல்லை. அதை பயன்படுத்த அனுமதி வழங்கப்பட்டுள்ளது. அதன் மீது நம்பிக்கை வைக்க தரப்படவில்லை. அல்லாஹ்விடத்தில் அஸ்பாபுகளில் வாக்குறுதி இல்லை. குர்ஆனில் அஸ்பாபுகளில் வாக்குறுதி அளிக்கப்படவில்லை. மாறாக ஆமால்களில் வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது.

கடை வைத்தால் லாபம், கல்யாணம் முடித்தால் பிள்ளை தருவேன் என்று அல்லாஹ் ஒரு இடத்தில் கூட வாக்குறுதி தரவில்லை.

நோன்பு வைத்தால் தக்வா தருவேன். தொழுதால் உணவு தருவேன்.

தக்வா வந்தால் அறியா புரத்து ரிஸ்க் தருவேன்.

ஹஜ் செய்தால் ஏழையாக்க மாட்டேன்.

தஃவத் செய்தால் ஹிதாயத் தருவேன்

இப்படி ஆமால்களுக்கு அல்லாஹ்விடம் வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது

## 44. "ஒரு அமலுக்கு நான்கு"

ஒரு அமலைச் செய்ய வேண்டுமானால் நான்கு விஷயம் தேவைப்படுகிறது.

1. அந்த அமலின் பளாயில்
2. அந்த அமலுடைய மஸாயீல்

3. அந்த அமலில் இக்லாஸ்

4. அந்த அமல்மீது பரிபூரண எகீன்

மேற்கண்ட நான்கு தன்மைகள் ஒரு அமலில் ஒன்று சேர்ந்தால் அந்த அமல் அல்லாஹ்விடத்தில் அங்கீகரிக்கப் பட்ட அமலாக ஆகிவிடும்.

## 45. "நன்றி செலுத்துங்கள்"

அல்லாஹ் எந்தச் செயலை கடமையாக்கினானோ அதை செய்வது. எதை தடுத்தானோ அதை செய்யாமல் இருப்பதுதான் அல்லாஹ்வுக்கு செய்ய வேண்டிய மிகப் பெரிய நன்றி ஆகும். அல்லாஹ் நமக்கு செய்த உபகாரங்களுக்கு நாம் எப்படி நன்றி செலுத்த வேண்டும்? அல்ஹம்துலில்லாஹ் மட்டும் கூறி நன்றி செலுத்துவதைவிட தொழுது , நோன்பு வைத்து நன்றி செலுத்துவது மிகவும் மேலான நன்றியாகும்.

## 46. "தஃவத் கொடுங்கள்"

ஹகீமுல் உம்மத் அஸ்ரப் அலீ தானவி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள். எந்த அமல் என் வாழ்க்கையில் வரவேண் டுமோ முதலில் நான் அந்த அமலின் மீது பிறருக்கு தஃவத் கொடுப்பேன். எந்த அளவுக்கு என்றால் அந்த அமல் என் வாழ்க்கையில் வரும்வரை. மேலும் எந்த அமலில் இஸ்திகாமத் இல்லையோ அந்த அமலை பார்த்து தெரிந்து கொள்ளலாம். அந்த அமலின் தஃவத் விடுபட்டு போய்விட்டது என்று.

## 47. "நபிமார்களின் மூன்று தஃவத்"

நபிமார்களின் தஃவத் மூன்று விதமாக இருந்தது.

1. அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட மஃலூக்குகளால் ஆகும் என்ற தவறான நம்பிக்கையை உள்ளத்திலிருந்து எடுத்துவிட்டு ஹாலிக் படைத்தவனைக் கொண்டுதான் ஆகும் என்று மக்களை அழைப்பது.

2, அஸ்பாப் (காரண காரியங்கள்)களால் ஆகும் என்ற நம்பிக்கையை உள்ளத்திலிருந்து எடுத்துவிட்டு அஃமால் களைக் கொண்டு தான் ஆகும் என்ற தஃவத் கொடுப்பது.

3. துன்யா நிரந்தரமல்ல. ஆஹிரத்துடைய வாழ்க்கைதான் நிரந்தரம் என்பதை ஆணித்தரமாக மக்களிடம் எடுத்துக் கூறி தஃவத் கொடுப்பது.

## 48. ''நஸ்டவாளி யார்?''

ஒரு மாவட்டத்தில் கலெக்டர் பதவிக்காக 100 பேர் தேர்வு எழுதினார்கள். அதில் 10 பேர் மட்டும் பரீட்சையில் தேறினார்கள். அந்த பத்து நபர்களும் ஒவ்வொரு மாவட்டத்தில் கலெக்டராக நியமிக்கப்பட்டார்கள். இதில் ஒருவர் மட்டும் வேலையை சரியாகச் செய்யாமல் காலத்தை வீணடித்தார். அவரை அரசு பதவியில் இருந்து தூக்கிவிட்டது.

இதில் பரீட்சை எழுதும்போது பெயிலானவர்கள் நஸ்டவாளிகளா? அல்லது வேலைக்கு வந்து வேலையை விட்டவர் நஸ்டவாளியா?

இதுபோல தஃவத்துடைய வேலையில் ஈடுபட்டு பின் அதை சரியாக செய்யாமல் வேலையைவிட்டு விலகுபவர் மிகப்பெரிய நஸ்டவாளி ஆவார். எனவே இந்த வேலை நமக்கு கிடைத்தது பெரும் பாக்கியமாகும். அதை வீணடித்து விடாமல் பயந்து பயந்து அல்லாஹ்விடம் துஆ செய்து கொண்டே இஸ்திகாமத்துடன் செய்து கொண்டே இருக்க வேண்டும்.

## 49. ''இரண்டு பாக்கியங்கள்''

கஷ்த்தில் செல்வதால் நமது ஈமான் மெருகேறுகிறது. நபர் நபராக வீடு வீடாக தெரு தெருவாக சென்று மக்களை சந்திப்பதின் காரணமாக இரண்டு விஷயங்களை அல்லாஹ் கொடுக்கிறான்.

1. துன்யாவின் வேலையை அல்லாஹ் சுப்ஹான ஹூவ தாஆலா மலக்குகளைக் கொண்டு பூர்த்தி செய்ய வைப்பான்.

2. கப்ருடைய கேள்விக்கு சரியான பதில் கூற வைப்பான்.

## 50. “தியாகத்தால் மலர்ந்த ஹிதாயத்”

ஜின்னீரா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் ஹஜ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் அடிமையாக இருந்தார்கள்.

ஒரு முறை இவர்கள் ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பற்றிக் கூறும்போது கத்தாபுடைய வீட்டு கழுதைக்கு ஹிதாயத் கிடைத்தாலும் கிடைக்கும். ஆனால் உமருக்கு ஹிதாயத் கிடைக்காது என்று கூறினார்கள். சிலருடைய தியாகம், சிலருடைய ஹிதாயத்திற்கு காரண மாகும். ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சகோதரியின் தியாகத்தை அல்லாஹ் கபூல் செய்ததால் அதன் காரணமாக ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர் களுக்கு ஹிதாயத்துடைய வாசலைத் திறந்தான் அவர்களை எந்த அளவு அல்லாஹ் உயர்த்தினான் என்றால், முஹல்லாவின் அமீராக்கவில்லை. முஃமின்களின் அமீராக்கினான். அவர்களின் நாவிலே அல்லாஹ்வே பேசினான்.

## 51. “தீனா? துன்யாவா?”

தீனை நோக்கமாக ஆக்கினால் அல்லாஹ், துன்யாவை இழிவான முறையில் நமது காலுக்கு கீழே போடுவான். மாறாக துன்யாவை நோக்கமாக ஆக்கிக்கொண்டால், துன்யாவும் கிடைக்காது. அப்படி கிடைத்தாலும் அதில் நிம்மதி, சந்தோஷம் இருக்காது. தீன் அறவே இருக்காது. முஃமின்களின் அசல் நோக்கம் தீன்தான்.

## 52. அல்லாஹ்வின் கட்டளை

அல்லாஹ் ஒரு விஷயத்தை வானத்தில் தீர்மானித்து விட்டால் வானவர்கள் தம் சிறகுகளை இறைக் கட்டளைக்குப் பணிந்தவர்களாக அடித்துக் கொள்வார்கள். (அல்லாஹ்வின் அந்த கட்டளையை) பாறையின் மீது சங்கிலியை அடிப்பதால் எழும் ஓசையைப்போல் (மலக்குகள் கேட்பார்கள்)

*அறிவிப்பாளர்: ஹஜ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு, தகவல்: புகாரி*

சுப்யான் (ரஹ்) அவர்கள் அறிவிப்பில்...(அந்த ஓசையின் மூலம்)

அல்லாஹ் தன் கட்டளையை வானவர்களுக்கு எட்டச் செய்வான் என்று வருகிறது.

(இறைக் கட்டளையை செவியுறும் வானவர்கள் பீதிக்குள்ளாகிறார்கள் (பின்னர்) அவர்களின் இதயத்தை விட்டு பீதி அகற்றப்படும்போது அவ்வானவர்கள் (அல்லாஹ்விற்கு நெருக்கமாக இருக்கும்) வானவர்களிடம் நம் இறைவன் என்ன சொன்னான்? என்று வினவுகின்றனர். அதற்கு அவர்கள் (நம் இறைவன் இன்னின்ன உண்மையான கட்டளைகளை சொன்னான் . வஹீவ அழியுன் கபீர் அவன் உயர்ந்தவன், பெரியவன் என்று பதிலளிப்பார்கள். *(தகவல்: புகாரி)*

## 53. "தீன் இடிந்து விழலாமா?"

இஸ்லாம் என்பது ஒரு கட்டிடமாக இருக்கிறது. அதனுடைய அடித்தளம் ஐந்து அதில் முதலாவது ஈமானாக இருக்கிறது. வீட்டின் நோக்கம் மழையைக் கொண்டு, பனியைக் கொண்டு பாதுகாப்பு பெறுவதுதான். வீடு பலகீனமாக இருந்தால் மழை பெய்தால் இடிந்து விழும். இதேபோல் கலிமா பலகீனமாக இருந்தால் தீன் இடிந்து விழும். இஸ்லாம் பள்ளி வாசல்களோடு மட்டுமல்ல. எல்லாவற்றிலும்

தொடர்புடையது. அல்லாஹ்வுடைய ,படைப்பினங்கள் அல்லாஹ்வுடைய குடும்பமாக இருக்கிறது. உலகத்தில் எத்தனை படைப்புகள் இருக்கின்றதோ அவை அனைத்தும் அல்லாஹ்வின் குடும்பம்தான். அல்லாஹ்வுக்குப் பிரியமான அடிமை அல்லாஹ்வுடைய குடும்பத்தில் உள்ள அடியானுக்கு உதவி செய்து கொண்டிருப்பான். நபிமார்கள் மக்கள் மீது எப்படி இறக்கம் காட்டினார்களோ அதேபோல நாம் மக்களை சந்தித்து விசாரிப்பது இறக்கம் காட்டுவது அல்லாஹ்வுக்கு பிடித்த மானதாக இருக்கிறது.

## 54. ''சுமையாகி விடாதீர்கள்''

ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றார்கள். முஸ்லிம்கள் மீது நாம் சுமையாகிவிடக் கூடாது. முஸ்லிம்கள் அது கொடுப்பாங்க. இது கொடுப்பாங்க என்று எதிர்பார்க்கக்கூடாது. நாமே உழைத்துச் சம்பாதிக்க வேண்டும். தஃவத்துடைய வேலையில் நீங்கள் உழைத்து நீங்கள் சம்பாதித்து அல்லாஹ்வின் பாதையில் புறப்படுங்கள். யாருக்கும் சுமையைக் கொடுக்காதீர்கள்.

தான் உழைத்த பணத்தைக் கொண்டு அல்லாஹ்வின் பாதையில் சிலவு செய்வதின் இன்பம், ருசி அலாதியானது அதன் மூலம் ஏற்படும் அமலில் ரூஹானியத் வெளிப்படும் அந்தப் பேச்சில் மக்கள் உள்ளங்களில் பெரும் தாக்கம் ஏற்படும்.

## 55. ''துஆவில் ஐந்து''

தஆவில் ஐந்து விஷயங்கள் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

1. சில துஆக்கள் கேட்டவுடன் கிடைக்கும்.
2. சில துஆக்கள் கேட்டபின் தாமதித்து கிடைக்கும்.
3. சில துஆக்கள் அழுது கேட்டால்தான் கிடைக்கும்.

4. சில துஆக்கள் கேட்டதற்கு மாற்றமாக கிடைக்கும்.

5. சில துஆக்கள் ஆஹிரத்தில்தான் பலன் கிடைக்கும்.

## 56. "உதவியின் கதவுகள் திறக்கப்படும்"

தஃவத்துடைய வேலை செய்யும்போது சோதனைகள் வரும். எல்லா சோதனைகளிலும் பல்லைக் கடித்துக் கொண்டு உறுதியாக இருக்க வேண்டும்.

உலகத்திலேயே ஆக சுமையானது இந்த தஃவத்துதான். ஷைத்தானுக்கும் ஆக பிடிக்காதது இந்த தஃவத்துதான். சோதனைகளில் ரொம்ப ரொம்ப கவனம் தேவை. காரணம் அது தடுமாற வைத்துவிடும். கவனமாக இருந்தால் சோதனை முடிந்தவுடன் அல்லாஹ்வின் உதவியின் கதவுகள் திறக்கப் படும். சோதனை வந்தால் எப்படி அழ வேண்டும் என்பதைக் கூட நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் காட்டித் தந்துள்ளார்கள்.

## 57. "அல்லாஹ்விடமே கேளுங்கள்"

முஃமின்கள் தங்களுடைய தேவைகளை அல்லாஹ் விடம் மட்டுமே கேட்பார்கள்." ஈமான் இல்லாதவர்கள் செய்யும் தொழிலே தெய்வம்" என்று நினைத்துக் கொண்டிருக்கிறார் கள். இன்று நாம் அவர்களைப் போல நினைப்போமானால் நாமும் அன்னியர்போல் ஆகிவிடுவோம்.

அஷ்பாபுகள் பக்கம் போகாமல் அல்லாஹ்வின் பக்கம் சென்று கேட்டுப் பெற்றால் எகீன் உருவாகும்.

காரணத்தை வைக்காமல் அல்லாஹ்விடம் துஆ செய்ய வேண்டும். காரணத்தை வைத்து தொடர்புக் கொள்ளாமல் நேரடியாக அல்லாஹ்விடம் தொடர்பு கொள்ள வேண்டும். இந்த தொடர்புக்கு பெரிய தாக்கம் இருக்கிறது.

## 58. "பொருப்புதாரிகளின் பொருப்பு"

ஒரு முஃமின் எப்போதுமே தன்னை உயர்வாக கருதவே கூடாது. ஜமாஅத்தில் சாத்திகளை அழைத்துச் செல்லும் பொருப்புதாரிகள் எப்போதும் பணிவுடன் நடந்துக் கொள்ள வேண்டும். சாத்திகளின் தகுதிக்கு தக்கவாறு அவர்களிடம் முறையாக நடந்துக் கொள்ள வேண்டும். பொருப்புதாரிகள் நினைக்க வேண்டும். என்னைவிட குணத்தால், அறிவால், தியாகத்தால், இல்மால் உயர்ந்தவர்கள் இங்கு இருக்கிறார்கள் என்று.

ஒரு சிஷ்யர் தனது ஷைகிடம் இன்று நான் ஒரு கனவு கண்டேன் என்றார்.

என்ன கனவு விவரமாக சொல் என்றார் ஷைகு. தஸ்து விரிக்கப்பட்டிருக்கிறது. அத்தனையும் உங்கள் பக்கம் வைக்கப்பட்டிருக்கிறது. என் பக்கம் உள்ள தட்டில் மலம் வைக்கப்பட்டிருக்கிறது என்றார்.

இதைக் கேட்ட ஷைகு நான் உயர்ந்தவன் அந்தஸ்த்தில் மிக மேலானவன். நீ சாதாரண ஆள் என்று விளக்கம் சொன்னார். உடனே சிஷ்யர், ஷைகு அவர்களே! கனவு இன்னும் முடியவில்லை. செய்தி இன்னும் இருக்கு என்றார். அந்த வஸ்த்துக்களை எடுக்கும்போது உங்கள் தட்டில் என் கையும், என் தட்டியில் உங்கள் கையும் என்று கூறினார். மமதை தலை குனிந்தது.

## 59. "நான்" என்ற அகம்பாவம்"

தஃவத் உழைப்பில் ஈடுபடும் யாரும் "நான்" என்ற அகம்பாவம் கொள்ளக்கூடாது. நான், நான் என்று எதற்கெடுத்தாலும் தன்னைப் பெரியதாக மதித்து பெருமைப் படக்கூடாது. "நான்" என்ற அகம்பாவம்தான் ஷைத்தானை சுவனத்திலிருந்து விரட்டி அடித்தது. சும்மா வரவில்லை அல்லாஹ்வின் லஃனத்தோடு பூமிக்கு வந்தான்.

ஒரு மகான் ஒத்தையடிப் பாதை வழியாக சென்று கொண்டிருந்தார். எதிரே நாய் நடந்து வந்தது. கீழே சாக்கடை நீர் ஓடிக்கொண்டிருந்தது. நாய்க்கு வழிவிடாமல் நடந்து போனார். நாயும் இறங்காமல் வந்து கொண்டிருந்தது. நாய் பக்கத்தில் வந்ததும் கீழே இறங்கினார் மகான். அப்போது அவர் கைலியில் சாக்கடை நீர் பட்டது. உடனே பக்கத்தில் இருந்த சுத்தமான நீரால் கைலியை கழுவினார்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த நாய் மகானை நோக்கி இந்த சாக்கடை நஜீஸ் கழுவி விட்டால் போய்விடும். ஆனால் உள்ளத்தில் ''நான்'' என்ற நஜீஸ் இருக்கே அதை கடல் தண்ணீர் முழுவதையும் போட்டுக் கழுவினாலும் போகாது என்று சொல்லி விட்டு ஓடியது.

## 60. "தீனும் போச்சு! துன்யாவும் போச்சு!"

தீனுடைய வேலை செய்பவர்கள் தீனையும் சரி செய்ய வேண்டும், துன்யாவையும் சரி செய்ய வேண்டும். துன்யாவில் இருந்து அதை சரி செய்துகொண்டே தீனையும் சரிசெய்து கொண்டே வரவேண்டும்.

வியாபாரத்தை, தொழிலை சரி செய்கிறேன் என்று தொழுகையை வீணாக்குகிறான். தொழுகையில் நின்று கொண்டு வியாபாரம், தொழிலை நினைத்து தொழுகையை வீணாக்குகிறான் மனிதன்.

இதில் வியாபாரம், தொழிலும் வீணாகி போகுது தொழுகையும் வீணாகி போகுது.

ஒரு நாய்க்கு ஒரு ரொட்டித் துண்டு கிடைத்தது. அ கவ்விக் கொண்டு ஓடியது. அந்தப் பக்கம் வாய்க்கால் வந்த அதில் தன்னைப் பார்த்தது அதில் ஒரு நாய் ரொட் துண்டைக் கவ்விக்கொண்டு இருந்தது. பொறாமை வந்த நாய்க்கு ''ளொல் ளொல்'' என்று குரைத்தது. ரொட்டித் துண் வாய்க்காலில் விழுந்தது. இரண்டும் போச்சு.

தீனுடைய வேலை செய்பவர்கள் தீனையும் வீணாக்கி, துன்யாவையும் வீணாக்கி விடக்கூடாது.

தீனும் போச்சு, துன்யாவும் போச்சு என்ற நிலைக்கு வந்துவிடக்கூடாது.

## 61. "அதிசய உண்மை"

தீனுடைய வேலைச் செய்யக்கூடியவர்கள் நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் சுன்னத்தான அமல்களை மிகமிக எச்சரிக்கையுடன் பேணி நடந்து வரவேண்டும்.

கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் மீது உண்மையான அன்பு இருப்பதற்கு அடையாளம், அவர்களின் சுன்னத்துகள் மீது அன்பு இருக்க வேண்டும். அந்த சுன்னத்துகள் நமது அங்க அவயங்களில் சொல், செயல்களில் பிரதிபலிக்க வேண்டும்.

லண்டன் பள்ளி வாசலுக்கு தொழ வரும் மக்களை ஒருவர் வெளியிலிருந்து கண்காணித்தார்.

அவர் ஒரு ஆச்சரியமான தகவல் ஒன்றை உலகிற்கு வெளியிட்டார். "லண்டனில் ஒரு பள்ளி வாசலுக்குள் தொழுகைக்காக ஒரு வக்தில் 400 பேர் நுழைந்தார்கள். 400 பேர்களும் வலது காலை வைத்தே உள்ளே நுழைந்தார்கள். ஒருவர் கூட இடது காலை வைத்து உள்ளே போகவில்லை. மீண்டும் பள்ளியிலிருந்து வெளியே வருவதையும் பார்த்தேன். 400 பேரும் இடது காலை வைத்தே வெளியே வந்தார்கள். ஒருவர்கூட வலதுகாலை எடுத்து வைத்து வரவில்லை. ஆச்சரியமாக இருக்கா? இதுதான் உண்மை.

## 62. "12 உசூல்களின் அவசியம்"

தஃவத்துடைய உழைப்புச் செய்பவர்கள் 12 உசூல்களை மிகவும் பேணுதலாக கடைபிடிக்க வேண்டும். யார் 12

உசூல்களை பேணி கடைபிடித்து விடுவார்களோ அவர்களின் வாழ்க்கையே மாறிவிடும். புடம்போட்ட தங்கமாக அவரை அது மாற்றிவிடும். 12 அமல்களை யார் சரியாக கடைபிடிக் கிறார்களோ அது அவரை் வலீயாக்கிவிடும். 12 அமல்களை சரியாகச் செய்தாலே அது போதும் நம் வாழ்க்கை பதமாக. 12 விஷயம் சொல்வதற்கும், கேட்பதற்கும் அல்ல. அதை செயல்படுத்துவதற்கு என்பது நன்கு விளங்க வேண்டும். 12 அமல்களை பேணாமல் பயான் செய்தால் அது அவரை பித்அத்தில் கொண்டு போய்விடும் என்று தீனுடைய பெரியார்கள் கூறுகின்றார்கள்.

12 அமல்களில் இரண்டாவது- மூன்றாவது பகுதியான காரியங்களில் எட்டில் யார் இரண்டு அமலை பூர்த்தியாக செய்துவிடுவாரோ அந்த கார்கூன் வாழ்க்கையில் 70% தீன் வந்துவிடும்.

1. ஆகுமான பேச்சைக் குறைத்துக் கொள்வது.
2. அடுத்தவர் பொருள் மீது ஆசைப்படக்கூடாது.

இது அனுபவத்தில் கண்ட உண்மையாகும்.

## 63. "புத்திசாலிகளா நீங்கள்?"

காரூன் அல்லாஹ்வை நம்பவில்லை. காசை நம்பினான். பிர்அவ்ன். ஆது, சமூது, சபா கூட்டத்தினர் இவர்கள் எல்லாம் உலக வஸ்த்துக்களை அஸ்பாபுகளை நம்பி வீணாய் போனார்கள். நபிமார்கள் அல்லாஹ்வை நம்பி வெற்றி அடைந்தார்கள். நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் உலகிற்கு ஒரு உண்மையைச் சொன்னார்கள். அது... இந்த முழு உலகமும் ஒரு கொசுவின் ஒரு இறக்கைக்குச் சமமில்லை என்று. நா அந்த அஸ்பாபுகளை நம்புகின்றோமா? அஸ்பாபுகளை படைத் அல்லாஹ்வை நம்புகின்றோமா? உலகம் பெரிசு. உலக

பொருள் பெரிசு, கார், வீடு பெரிசு என்று நம்பிய நிலையில் மௌத்து வரலாமா?

பாவம் மூலம் துன்யாவை சம்பாரித்து நமது குடும்பத்தார்கள் அனுபவிக்க நாம் பிச்சைக்காரனாக கப்ர் போகலாமா? மனைவி, மக்கள் குடும்பம் முக்கியம்தான். அதைவிட என் "செல்பு" முக்கியம்.

என் சக்ராத், கப்ர், சுவனம் முக்கியம்.

மௌத்து நிச்சயம். அதற்கு முன் நாம் இந்த தஃவத்துடைய பாதையில் அழைந்து திரிந்து அல்லாஹ்வின் இறக்கம் பெற்று அவனின் பொருத்தம் அடைந்து கலிமாவோடு சுவனம் புகவேண்டும்.

புத்திசாலிகளாக இருக்க ஆசைப்படனும்.

முஃமின்கள் இதை உணரவேண்டும். உஷார்.

## 64. "அரபுகளின் இரு தன்மைகள்"

அரபுகளிடம் இரண்டு தன்மைகள் இருந்தது. 1. பிடிவாதம் (ஜித்து) 2. வாக்குறுதியை பாதுகாத்தல். பொதுவாகவே அரபுகளிடம் இந்த இரண்டு தன்மைகள் இருந்தது. இஸ்லாம் வந்த பிறகு அபூஜஹில் குரூப் அவர்களின் பிடிவாதத்திலிருந்து ஒரு அங்குலம் கூட இறங்கி வராமல் அதிலேயே இருந்து அழிந்து நாசமாக போனார்கள். ஹஜ்ரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் குரூப் பிடிவாதத்தை கைவிட்டு ஈமான் கொண்டார்கள். ஈமானில் கடைசிவரை பிடிவாதமாக இருந்தார்கள். மேலும் வாக்குறுதியையும் காப்பாற்றினார்கள். அதிலும் உறுதியாக இருந்தார்கள். இன்று நாம் கலிமா சொல்லிவிட்டு பிடிவாதத்தில் இருக்கின்றோம். காரணம் கலிமாவுடைய வாழ்க்கை வாழ தயங்குகிறோம். இது மாபெரும் பிடிவாதமாகும்.

ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப்போல வாழ்வதற்கு இந்த காலத்தில் முபாரக்கான தீனுடைய வேலையை அல்லாஹ் தந்துள்ளான்.

இந்த முபாரக்கான வேலையில் நம்மை நாமே சரி செய்துகொள்ள வேண்டும். நாம் வாழ்க்கையை கழிக்க வரவில்லை. வாழ்க்கையை உண்டாக்க வந்துள்ளோம். உலகம் நமக்கு சிறைச்சாலை. அதை மனதில் வைத்து வாழ பழகிக் கொள்ள வேண்டும். முஸ்லிம்கள் ரயில் மாதரி அல்லாஹ்வின் வேதம் அல்குர்ஆன். நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் சுன்னத்தான வாழ்க்கைமுறை இரண்டை தவிர வேறுபக்கம் கவனம் செலுத்தாமல் நேராக சென்றால் ஜங்ஷன் (ஜன்னத்) போய் சேர்ந்து விடுவோம்.

## 65. “தஃவத் என்ற பூச்சு மருந்து”

நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களும், சத்திய சஹாபாக்களும் பல கஷ்டங்கள், சிரமங்கள், துன்பங்கள் போன்றவற்றை சகித்துக் கொண்டு அரும்பாடுபட்டு உருவாக்கிய இஸ்லாமிய பூஞ்சோலையில் இன்று புழுப்பூச்சிகள், வண்டுகள் வந்து சேர்ந்து அரித்து வருகிறது. அதை அழிப்பதற்காக தஃவத் என்ற பூச்சி மருந்து இலவசமாக அடிக்கப்படுகிறது. வயலில் புழுபூச்சிகளை அழிப்பதற்காக வயல்வெளிகளில் இலவசமாக பூச்சி கொல்லி மருந்தை அரசாங்கம் அடித்தால் எந்த விவசாயிதான் சந்தோஷப்படாமல் இருப்பார்கள்? விவசாயி களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும். அதுபோல இன்றைய தஃவத் வேலையின் மூலம் இஸ்லாமிய பூஞ்சோலைக்கு மருந்து அடிக்கும்போது நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கும், சத்திய சஹாபாக்களுக்கும் எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும் என்பதை நாம் விளங்க வேண்டும்.

## 66. ''இரண்டு வித்தியாசங்கள்''

நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் பெரிய தந்தை அபூதாலிப் அவர்கள் 46 வருடங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு உறுதுணையாக இருந்தார்கள். அவர்கள் இஸ்லாத்திற்கு வந்துவிட வேண்டும் என்று நமது கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் பெரிதும் பாடுபட்டார்கள். முயற்சி செய்தார்கள்.

அபூதாலிப் அவர்களின் மரண நேரத்தில் ''தாங்கள் ''லாயிலாஹ இல்லல்லாஹு என்ற கலிமா சொல்லி விடுங்கள். நான் கியாமத் நாளில் உங்களுக்கு சாட்சியாக இருப்பேன் என்று சொன்னார்கள். அதற்கு அவர் ''அபூதாலிப் மரணத்திற்கு பயந்து கலிமா சொல்லி விட்டாரென்று குறைஷிகள் குத்திப் பேசுவார்கள் என்ற பயம் மட்டும் இல்லாதிருந்தால் நிச்சயமாக நான் கலிமாச் சொல்லி உம்முடைய கண்களை குளிர வைத்துவிடுவேன் என்று கூறினார். அல்லாஹ்வின் ஹபீப் முயற்சித்தும் ஈமான் இல்லாமல் இறந்தார். ஏன்?

இதற்கு மாற்றமாக காலம் முழுவதும் அல்லாஹ்வுக்கும், அல்லாஹ்வின் ரசூலுக்கும், அல்லாஹ்வின் மார்க்கத்திற்கும் எதிரிகளாக இருந்து எவ்வளவு துன்பம் கொடுக்க இயலுமோ அவ்வளவு துன்பங்களையும் கொடுத்து வந்த அபூஸுஃப்யான், இக்ரிமா, ஹிந்தா இன்னும் இவர்கள் போன்றோர்களை பத்ஹீ மக்காவில் விரட்டி விரட்டி அல்லாஹ் ஹிதாயத் கொடுத்தான். இவர்கள் நமது நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களிடம் மோதியவர்கள் அவர்களிடம் சண்டை போட்ட வர்கள். அவர்களை கொலை செய்ய சூழ்ச்சி செய்தவர்கள். இவர்களுக்கு ஹிதாயத் கிடைத்தது ஏன்?

அபூதாலிப், நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களை அல்லாஹ்

வின் தூதர் என்று பார்க்கவில்லை. மாறாக தனது தம்பி மகன் என்றுதான் பார்த்தார். அவர் செய்த அத்தனை உதவிகளும் நபிக்கும், நபியின் வேலைக்கும் என்ற நிய்யத் அவரிடம் இல்லை. அவரிடம் பெயரளவில் தேட்டம் இருந்தது. உள் மனதில் தேட்டம் இல்லை. அத்துனை உதவியும், உறு துணையும் தம்பி மகன் என்ற கண்ணோட்டத்தில் மட்டுமே இருந்தது. அதனால் கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் மடியில் இருந்தும் அல்லாஹ் ஹிதாயத்தை நஸீபாக்கவில்லை. மாறாக விரட்டிப் பிடித்து ஹிதாயத்தை பெற்றவர்கள் அனைவரும் நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களை உண்மையான நபி என்று நன்கு விளங்கி இருந்தார்கள். இவர்கள் அல்லாஹ்வின் தூதர்தான். கடைசி நபிதான் என்று நன்கு விளங்கிக்கொண்டு மோதினார்கள். போர் செய்தார்கள். சூழ்ச்சி செய்தார்கள். இந்த இஸ்லாம் உண்மையான மார்க்கம் என்பதை நன்கு அறிந்து இருந்தும் மக்களை தடுத்தார்கள். இதன் காரணமாக இவர்களுக்கு அல்லாஹ் ஈமானுடைய நஸீபை கொடுத்தான்.

## 67. "மனிதனை கெடுக்கும் மாஹுல்"

மாஹுல் மனிதனை கெடுத்துவிடும். எவ்வளவு சூபியான மனிதராக இருந்தாலும் சரி அவர் மாஹுலில் மாட்டிக் கொண்டால் அவர் கெட்டு போய்விடுவார். எனவே நல்ல மாஹுலில் தன்னை போட்டு பழக்கிக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் மாஹுல் மனிதனை குதறித் தள்ளிவிடும்.

ஒரு ஓநாய் ஒரு மானை துரத்தியது. மான் தப்பிக்க தலைதெறிக்க ஓடியது. பின்பு தப்பித்தது. மானிடம் கேட்டார்கள். ஏன் இப்படி தலைதெறிக்க ஓடினாய்? அதற்கு மான் இப்படிச் சொன்னது. ஓநாய் என்னை துரத்தியது நான்

ஓடாமல் நின்றிருந்தால் என் உடல் என்னவாயிருக்கும்? கடித்து குதறி தின்று சின்னாபின்னமாகி இருக்குமே என்றது.

இன்று மாஹுல் ஒரு ஓநாய் மாதிரி. அதனிடம் சிக்காமல் ஜமா அத்தில் ஓடனும் இல்லாவிட்டால் மாஹுல் குதறி விடும்.

## 68. யார் பழையவர்?

தஃவத்துடைய வேலையில் காலத்தால் பழையவர் என்பது அல்ல. ஸிபத்தால் பழையவரே பழையவராவார். பல வருடங்களாக ஒருவர் ஜமாஅத்தில் சென்று கொண்டிருக்கிறார். அவரிடம் தீனுடைய ஸிபாத்துகள் வரவில்லை என்றால் அவர் புதியவரே! .

1. எகீன், 2. தக்வா 3.தவக்குல் 4. ஸபுர் 5. அஃலாக் இந்த ஐந்து வகையான ஸிபத்துகள் யாரிடம் இருக்கிறதோ அவர்கள்தான் பழையவ்ர். காலத்தால் அல்ல. ஒருவர் 25 வருடங்களாக இந்த வேலையை செய்கிறார். மேற்கண்ட ஐந்து ஸிபத்துகள் அவரிடம் இல்லையென்றால் அவர் பழையவர் அல்ல. பழையதில் பலவகை இருக்கிறது.

1. அரிசி 2. துணி

அரிசி பழையதானால் ருசி அதிகமிருக்கும். தரம் கூடுதலாக இருக்கும். விலையும் கூடும். துணி பழையதானால் இத்துப்போகும். கிழிந்து கந்தலாகும். அதை உபயோகப் படுத்தவே முடியாது.

இந்த இரண்டில் நீங்கள் எந்தவகை? என்று மதீனா முனவ்வராவின் அமீர் செய்யது கான் சாஹிப் மௌலானா கேட்டார்கள். உங்கள் பதில் என்ன?

..........................................................................................

..........................................................................................

கோடிட்ட இடத்தில் எழுதிக் கொள்ளுங்கள்.

## 69. “நீங்க எந்த ரேங்க்!”

தஃவத் வேலையில் ஈடுபடுவோர்களின் அமலின் தரம் நாளுக்கு நாள் கூட்ட வேண்டும்.

சுப்ஹீக்கு பாங்கு சொன்னவுடன் சுன்னத்தான இரண்டு ரகஅத் உடனே தொழவேண்டும்.

இரண்டு ரகஅத் சுருக்கமாக தொழனும். முதல் ரக அத்தில் குல்யா அய்யுஹல் காபிரூன் சூரா ஓதவேண்டும். இரண்டாம் ரகஅத்தில் குல்ஹுவல்லாஹு சூரா ஓத வேண்டும்.

தொழுகையின் முதல் ரேங்க் அவ்வல் தக்பீர் அல்ல. முதல் ரேங்க், முதல் கிரேட்: பாங்கு சொல்வதற்கு முன்பே பள்ளிக்கு சென்று தொழுகைக்காக காத்திருப்பது.

ஹஜ்ரத் ஹகீமுல் உம்மத் அஸ்ரப் அலீ தானவி (ரஹ்) அவர்கள் பாங்கு சொல்வதற்கு முன்பே பள்ளிக்கு சென்று தொழுகைக்காக காத்திருப்பார்கள்.

இரண்டாவது ரேங்க்:- பாங்கு சொன்ன உடன் துன்யாவை உதறிவிட்டு பள்ளிக்கு ஓடி வருவது.

மூன்றாவது ரேங்க்:- தக்பீர் ஊலாவாகும். உங்கள் ரேங்க் என்ன?

..........................................................................................

கோடிட்ட இடத்தை பூர்த்தி செய்து விடுங்கள்.

## 70. “ஆறு அமல்கள் செய்வீர்களா?”

சுப்ஹீ தொழுகை முடிந்த பின் உடனே எழுந்து ஓடக் கூடாது. நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் சுப்ஹு தொழுதபின் அதே இடத்தில் அமர்ந்து ஆறு அமல்கள்

செய்வார்கள். அதன் பின்புதான் தனது இருப்பை கழைவார்கள். இதுதான் சுன்னத்தான முறை. தீனுடைய வேலையில் ஈடுபடுவோர் இந்த முக்கியமான சுன்னத்தை பேண வேண்டும்.

கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் தொழுது முடித்தபின் செய்த ஆறு அமல்கள் வருமாறு:

1. அஸ்தஃக்ஃபிருல்லாஹ் 3 தடவை

2. அல்லாஹும்ம அந்தஸ்ஸலாம்- வமின்கஸ்ஸலாம்- தபாரக்த்த வத ஆலய்த்த யஃதல் ஜலாலி- வல் இக்ராம்.

3. அல்லாஹும்ம - லா மானிஅ- லிமா அஃதய்த்த- வலா முஃதிய - லிமா மனஃத்த- வலா யன்ஃபவு- ஃதல்-ஜஃத்தி மின்கல்- ஜஃத்து.

4. அல்லாஹும்ம அயின்னீ அலாஃதிக்ரிக - வஷுக்ரிக வஹீஸ்னு- இபாதத்திக- லாயிலாஹ இல்லல்லாஹீ - வஹ்தஹீ லா ஷரீக-லஹீ- லஹீல் முல்க்கு- வலஹுல் ஹம்ஃது வகுவ அலா- குல்லி- ஷைஇன் கஃதீர்.

5. லாயிலாஹ இல்லல்லாஹு வலா நஃபுஃது இல்லா இய்யாஹு - லஹுந்நிஃமத்து- வலஹுல் ஃபழ்லு வலஹுஸ்ஸனாவுல்- ஹஸனு- லா இலாஹ இல்லல்லாஹு- முக்லிஸீன- லஹீத்தீன- வலவ்கரிஹல் காஃபிரூன்.

சுப்ஹான- மன்லாயஃலமு- கஃத்ரஹீ- கைரஹு வலாயப்லுஃகுல் வாஸிஃபூன ஸிஃபத்தஹு- ஸுப்ஹான றப்பியல்- அலிய்யில்- அஃலல் வஹ்ஹாப்

6. சுப்ஹானல்லாஹ் 33 தடவை

அல்ஹம்துலில்லாஹ் - 33 தடவை

அல்லாஹு அக்பர்- 33 தடவை

லாயிலாஹ இல்லல்லாஹு- வஹ்தஹு - லா ஷரீகலஹு

லஹுல் முல்கு- வலஹுல் ஹம்ஃது யுஹ்யீ - வயுமீத்து வஹுவ அலா குல்லி- ஷைன்- கஃதீர்.

குறிப்பு: ஒவ்வொரு தொழுகைக்கு பின்பும் முன் குறிப்பிட்ட தஸ்பீஹ்களை ஓதி 100ஐ நிறைவு செய்பவரின் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. (தகவல்: முஸ்லிம்)

தொழுகை முடித்து விட்டு ஓடாமல் மேலான இந்த சுன்னத்துகளை பேணுதலாக செய்து வரவேண்டும்.

## 71 ''தவறான நம்பிக்கை!''

பூமிக்கு தண்ணீர் விடவில்லை என்றால் வெடித்து விடும். அதுபோல ஈமானுக்கு உழைப்புச் செய்யா விட்டால் ஈமான் வெடித்துவிடும். அதாவது கெட்டுப்போகும். உதாரணமாக சட்டை கிழிந்தால் உடல் தெரியும். அதுபோல ஈமான் கெட்டால் வஸ்துக்களை கொண்டுதான் ஆகும் என்று தெரிய ஆரம்பிக்கும். இன்று மக்கள் அப்படித்தான் நினைத்து வருகிறார்கள். கடை, வியாபாரம், தொழில், ஆபீஸ், அரசாங்கம் இவைகளைக் கொண்டுதான் எல்லாம் ஆகுது என்று மக்கள் தவறாக நினைக்கத் துவங்கி விட்டார்கள்.

## 72. ''காலையில் ஒருபேச்சு! மாலையில் ஒரு பேச்சு''

மனிதன் மாறக்கூடியவன். காலையில் ஒரு பேச்சு பேசுவான். மாலையில் ஒரு பேச்சு பேசுவான்.

காலையில் கடை திறந்ததும் நல்ல சரக்குங்க வாங்க, வாங்க சரக்கு வாங்குங்க காசு தாங்க காசு தாங்க என்று பேசு கிறான். மாலையில் அனைத்துக் காசையும் கடைக்காரனிடம் கொடுத்து விட்டு எனக்கு சரக்குதான் வேண்டும். எனக்கு சரக்குதான் வேண்டும். இந்தாங்க காசு என்று பேசுகிறான்.

காலையில் காசு, காசு; மாலையில் சரக்கு, சரக்கு மனிதன் நிலை இதுதான்.

## 73. "மாலிக்கா? மஃலூக்கா!"

இன்று முஸ்லிம்களின் ஈமான் கெட்டதால், ஆமால் கெட்டுப் போச்சு.

ஈமான் எங்கு போச்சு...? சாமானில் போச்சு. ஈமானில் உழைப்பு செய்து அல்லாஹ்விடம் சேர்ந்தால் முஸ்லிம்களின் ஹாலாத்து சரியாகும்.

ஹால் நிலை
சால் - செயல்
ஈமான்- நம்பிக்கை

ஹால்: இப்றாஹிம் (அலை) அவர்களுக்கு நம்ரூதின் நெருப்பு குண்டம்.

சால்: அல்லாஹ்வின் மீது நம்பிக்கை

பெயல்: முடிவு குளிர் ஆனது.

இதுபோல தீனுடைய வேலை செய்பவர்களுக்கு சோதனைகள் வரும். கஷ்டங்கள் துரத்தும். அதில் உறுதியாக இருந்துவிட்டால் நிலைமைகள் மாறி உதவி வரும்.

ஹால் - மஃலூக்

அல்லாஹ்: மாலிக்

அல்லாஹ் நம் பக்கம் இருந்தால் ஹால் என்ன செய்யும்?

உதாரணம் பனி புஷ்ஷுன்னு வரும் பயப்படக்கூடாது. பின்பு ஓடிவிடும்.

## 74. "யார் துர்பாக்கியசாலி?"

தஃவத்துடைய வேலை ஒருவருக்கு கிடைத்தால் அவர் பெரும் பாக்கியசாலி ஆகிவிடுகிறார்.

அல்லாஹ்! கஷ்டங்களை ஷர்த்தாக வைத்துள்ளான். நமது பலகீனமே இதுதான்.

கஷ்டம் இல்லாமல் அல்லாஹ்வை அடைய முடியாது. நபிமார்கள் அனைவரும் கஷ்டங்களை அனுபவித்த பிறகே அல்லாஹ்வின் நெருக்கத்தில் வந்தார்கள். ரலியல்லாஹு அன்ஹு, வரலு அன்ஹு என்ற பட்டத்தைப் பெற சஹாபாக்கள் பட்ட கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமல்ல. நபிமார்களின் தலைவர் அல்லாஹ்வின் ஹபீப் நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸ்ல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் அனைவர்களை விடவும் அதிகம் கஷ்டத்தை அனுபவித்துள்ளார்கள். எனவே கஷ்டங்கள்தான் உள்ளத்தின் தொடர்பை அல்லாஹ்விடம் இணைக்கிறது.

## 77. "என் ஹபீபே கெஞ்சாதீங்க"

கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் தனது பெரிய தந்தை அபூதாலிப் அவர்களின் மரண நேரத்தில் தனது மடியிலே போட்டுக் கொண்டு கலிமாவை சொல்லிடுங்க மற்ற விஷயங்களை நான் பார்த்துக் கொள்கிறேன் என்றார்கள் அல்லவா?

அவர் கலிமாவை ஏற்க மறுத்தார்.

மகனே! நீ சொல்லும் நரகம் என்று ஒன்று இருந்தால் அதில் விழுந்து வேகவும் நான் தயார்! ஆனால் மக்காவாசிகளின் அன்பை அவர்கள் என்மீது வைத்திருக்கும் நம்பிக்கையை என்னால் பகைத்துக் கொள்ளவே முடியாது. அந்த அளவு அவர் ப்ரீட்டீஸ் பார்த்தார். ஆனாலும் கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கெஞ்சுகிறார்கள். அவர் மறுக்க கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கெஞ்ச இப்படியே தொடர்ந்தது.

இந்தக் கெஞ்சுதல் மாபெரும் அரசனான ஹிதாயத்தின் சொந்தக்காரனான அல்லாஹ்வுக்குப் பிடிக்கவில்லை. ஹிதா

யத்தின் கஜானா அவன் கையில் அல்லவா இருக்கிறது? அதை அவன் நாடியவர்களுக்கு மட்டும்தான் கொடுப்பான். என்னுடைய ஹபீப் கெஞ்சுகிறார்கள். ஆனால் அபூதாலிப் மக்கா காபிர்களையும் அவர்களின் பெருமையையும் அல்லவா பேசுகிறார்.

என் ஹபீப் உன்னை தனது முபாரக்கான மடியில் போட்டுக்கொண்டு கலிமாவுக்காக கெஞ்சுகிறார்கள். நீ மக்கா வாசிகளின் அந்தஸ்த்தை அல்லவா? பார்க்கிறாய்? உடனே தனது ஹபீப் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் மீது இறக்கப்பட்டு பாசத்தோடு நீங்க மடியில் போட்டு ஹிதாயத்திற்காக கெஞ்ச வேண்டாம். உங்களுக்கு ஹிதாயத் கொடுக்கும் பொறுப்பு இல்லை, விட்டுடுங்க. எழுந்திருங்க என்ற அன்பான தோரணையில் பாசத்தோடு ஒரு ஆயத்தை அல்லாஹ் இறக்கினான். இந்த ஆயத்து கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களை கண்டித்து இறங்கியதல்ல மாறாக பாசத்தோடு இறங்கிய ஆயத்தாகும்.

இதோ அந்த ஆயத்து: ''இன்னக்க லா தஃதீ மன் அஹ்பப்து, வலா கின்னல்லாஹ யஹ்திமன் யஷாவு- பொருள்: நபியே! நீங்கள் விரும்புகிறவர்களுக்கு நேரான வழியைக் கொடுக்க முடியாது. மாறாக அல்லாஹு தஆலா தான் நாடியவர்களுக்கு நேரான வழியைக் கொடுப்பான். (அல் குர்ஆன்)

## 78. ''ஆறு வழிகளில் ரிஜ்க்''

அல்லாஹ் முஃமின்களுக்காக உணவுக்கு பல வழிகளை வைத்துள்ளான். முஃமின்களின் உணவுக்காக அல்லாஹ் மொத்தம் ஆறு வழிகளை ஏற்படுத்தி உள்ளான்.

1. இறையச்சம் (தக்வா) மூலமாக
2. இஸ்த்திக்பார் பாவமன்னிப்பு மூலமாக

3, தொழுகை மூலமாக

4. துஆவின் மூலமாக

5. தவக்குல் மூலமாக

6. சதக்காவின் மூலமாக

ஆனால் முஸ்லிம் அல்லாதவர்களுக்கு உணவுக்காக ஒரே ஒரு வழியைத்தான் வைத்துள்ளான்.

1. கஷ்டப்பட்டு உழைத்து சம்பாதிப்பது.

## 79. ‘‘சுகங்களை திருடாதீர்கள்’’

நாம் காபிர்களை வெறுக்கிறோம். அவர்களிடம் இருக்கும் குப்ரின் வாடை நமக்கு வெறுப்பை உண்டாக்கு கிறது. ஆனால் நாம் அவர்கள் உடை அணிவதைப்போல் நாமும் அணிகிறோம். அவர்கள் உண்பதைப் போல் உண்ண ஆசைப் படுகிறோம். அவர்கள் சம்பாதிப்பதைப்போல் நாமும் சம்பாதிக்க ஆசைகொள்கிறோம். அவர்கள் உலகில் ஆடம்பரமாக, சந்தோஷமாக, உல்லாசமாக, சுகமாக இன்னும் சொல்லப் போனால் அவர்கள் தன் இஷ்டத்திற்கு வாழ்வதைப்போல் நாமும் வாழ ஆசைப்படுகிறோம். இது மாபெரும் சிரிப்பிற்குரிய விஷயமாக இருக்கிறது. காபிர்களுக்கு உலகம்தான் சுவனப் பூஞ்சோலை. அவர்கள் இங்கேயே அனைத்து விஷயங்களை யும், சுகபோகங்களையும் அனுபவித்துவிட்டு சென்று விடுவார்கள். நமக்கு இவ்வுலகம் சிறைச்சாலை. நமக்கு உலகில் தீனுடைய உழைப்பு, கப்ரில் ஓய்வு சுவனத்தில் உல்லாச சுகம். இதை மனதில் வைத்து வாழவேண்டும். துன்யாவின் அற்ப சுகத்திற்காக அவர்களோடு போட்டி போட்டு மறு உலக சுகத்தை இழந்துவிடக்கூடாது. காபிர்களுக் காக உள்ள அற்ப உலக சுகங்களை நாம் போட்டி போட்டு திருடிவிடக்கூடாது.

## 80. "முழுத்தீன் என்றால் என்ன?"

முழுத்தீன் என்பது ஐந்து பெரும் துறைகள் சார்ந்தது ஆகும். இந்த ஐந்து துறைகளில் முழு ஷரீஅத் மறைந்து இருக்கிறது. சஹாபாக்களிடம் முழுத்தீன் இருந்தது. இன்று முஸ்லிம்களிடம் முழுத் தீன் வருவதற்காகத்தான் தஃவத் தப்லீக்குடைய வேலை உலகம் முழுவதும் நடந்து வருகிறது.

ஐந்து துறைகளில் ஒன்று விடுபட்டாலும் முழுமையான தீன் ஆகாது.

1. ஈமானியாத்: இதில் 77 கிளைகள் இருக்கின்றன.

2. இபாதாத்: இஸ்லாத்தின் பர்ளுகள் ஐந்து உள்பட அனைத்து இபாதத்துகளும் இதில் அடங்கும்.

3. மு ஆமலாத்: கொடுக்கல், வாங்கல் இதில் வியாபாரம் தொழில், கடன்வரை அனைத்தும் அடங்கும். பொதுவாக இது முழுமையான பொருளாதார துறையாகும்.

4. முஆஷராத்: குடும்ப வாழ்க்கை கலையாகும். இதில் வாழ்வியல் அனைத்தும் இடம் பெற்றுள்ளது.

5. அஃ்லாக்கியாத்: அனைத்து நற்குணங்களின் துறையாகும். இதில் 64 கிளைகள் உண்டு.

1. இறையியல் 2. வணக்கவியல், பொருளியல் 4. குடும்பவியல் 5. குணவியல் ஆகும்.

## 81. "பேச்சில் காட்டும் வேலை அல்ல"

தஃவத்துடைய உழைப்பு பேச்சில் காட்டும் வேலை அல்ல. அமலில் காட்டும் வேலையாகும். நமது தீனுடைய பெரியார்கள் சொல்லித் தந்த தீனுடைய வேலையின் உசூல்களை கண்மூடிக்கொண்டு செயல்பட வேண்டும்.

இந்த வேலையில் புதுப்புது விஷயங்களைச் சேர்க்கக்கூடாது. உள்ளத்தை உருக்கி உருக்கி இந்த வேலையை தந்துள்ளார்கள். நாம் அடிக்கடி அவர்களிடம் சென்றால் பிரகாசம் கிடைக்கும். வேலை சின்னது. ஆனால் பிரதிபலிப்போ மிகப் பெரியது. நம்முடைய பேச்சு பிரகாசம் இல்லை. பேச்சை பெரியதாக மதிக்கக்கூடாது. இந்த வேலையில் நம்முடைய சிறுசிறு பே உசூல் இடம்பெற இடம் கொடுக்கக்கூடாது. 100-க்கு 100 தீனுடைய பெரியார்களின் உசூல்கள்தான்.

விமானம் 0-180 டிகிரியில் ஓடும். ஒரு டிகிரி நூல் அளவுதான் வித்தியாசம் இருக்கும். ஓட்டுபவர் இஷ்டத்திற்கு ஒரு நூல் அளவு அசைத்து விட்டால் விமானம் பெரும் விபத்துக்குள்ளாகும்.

லட்சக்கணக்கான தூரம் சென்ற பிறகு நஷ்டம். எச்சரிக்கை.

## 82. "ஊட்டச்சத்துக்கள் உங்களுக்காக"

1. நெருப்பு தங்கத்தை தூய்மைப்படுத்துகிறது. கஷ்டங்கள் மனிதனை வலு உள்ளவனாக மாற்றுகிறது.
2. நீச்சல் தெரிந்தவனுக்கு ஆழத்தைப் பற்றி கவலை இல்லை.
3. நெருப்பில் துரு பிடிப்பதில்லை. தூக்கணாம் குருவி கூடு காற்றடித்து சாய்வதில்லை.
4. ஆயிரம் வெட்டுக்கள் விழுந்தாலும் வைரத்தின் மதிப்பு குறையாது.
5. வாழ்க்கை என்பது ஒரு ஆறு. அதில் திடீர் வெள்ளம் வரும். பயந்து விடக்கூடாது.
6. துன்பத்தின் அஸ்த்தமானத்தில் இன்பத்தின் உதயம் உதிக்கும்.

7. கனிந்த மனம் வீழ்வதில்லை. முத்தைப் பெற்றெடுத் தாலும் சிப்பி சிப்பிதான்.

8. ஆசைப்பட்டதை அடைய ஆயிரம் தடைகள் இருக்கும்.

9. கடல் இருக்கும்வரைதான் அலை இருக்கும்.

10. தெரியாத விஷயங்களில் தலையிடக்கூடாது. தெரிந்த விஷயத்தை மறைக்கக்கூடாது.

குறிப்பு: இவைகள் ஒரு தாயீக்கு ஊட்டச்சத்துகளாகும்.

## 83. உங்கள் சிந்தனைக்கு

1. நாம் வாழ்க்கை முழுவதும் பேசி ஒருவருக்கு ஹிதாயத் கிடைத்தால் அது நமது வெற்றியாகும்.

2. ஜமாஅத்துக்கு சிலவு செய்வது. அடுத்தவர்களுக்கு அல்ல நமது சிலவுதான்.

3. உலகத்தில் சிரமம் இருந்தால், தீனிலும் சிரமம் இருக்கும்.

4. ஒவ்வொரு சமயத்திலும் அல்லாஹ் நமக்கு தகுதியைத் தருகிறான் அதை பாதுகாக்க வேண்டும்.

5. இன்று முஸ்லிம்கள் தொழுகையை கடமையாக மட்டும் நினைத்து தொழுகிறார்கள். அதனால்தான் தொழுகை யின் ருசி தெரியவில்லை.

6. பெற்ற பிள்ளைகள், பெற்றவர்களை மதிக்காமல், பெற்றோர்களின் சாபத்திற்கு ஆளாகிறார்கள். பின்பு அல்லாஹ்வின் எதிரிகளாகிறார்கள். இதை சரி செய்யத்தான் தப்லீக்.

7. உடை அழுக்காவதுபோல உலக ஆசாபாசம் மூலம் ஈமான் அழுக்காகுது. அதை தீன் என்ற தண்ணீர் ஊற்றி துவைக்கனும். அப்பொழுதுதான் அழுக்கு போகும்.

8. ஒரு முஸ்லிம் நடந்தால் மற்றவர்கள் அவர் பக்கம் சாயவேண்டும். ஓடக்கூடாது.

9. சஹாபாக்கள் தீனை தேடி அலைந்தார்கள். ஆனால் இன்று அது நமக்கு பரம்பரை சொத்து.

10. துன்யாவில் முயற்சி நமது பொறுப்பு. நமக்கு நிர்ணயம் செய்ததை கொடுப்பது அல்லாஹ்வின் பொறுப்பு.

## 84. "வேலை செய்பவர்கள் கவனத்திற்கு"

1. இந்த வேலையில் நாம் ஒட்டிக்கொண்டே இருக்க வேண்டும். அதன் காரணமாக நமது கண்ணுக்கே தெரியாமல் அல்லாஹ் இஸ்லாஹ் தருவான். அதைக் கண்டு மற்றவர்கள் ஆச்சரியப்படுவார்கள்.

2. இந்த வேலையில் வாப்ஸி என்பது கிடையாது. இந்த வேலையையும், இந்த உம்மத்தையும் பிரிக்கவே முடியாது. இந்த வேலை ஒரு கோர்ஸ் திரும்ப வருவோம் வாப்ஸ் என்பது நமக்கு கபனிட்டு கப்ருக்கு கொண்டு போவது. அதன்பின் திரும்ப வரமுடியாததுதான். திரும்பிச் சென்று நமது வேலைகளோடு இந்த வேலையை செய்யப் போகிறோம்.

3. "நான்" என்பது இந்த வேலைக்கு பெரிய ஆபத்து.

4. வேலையில் ஏற்படும் ஒவ்வொரு சூழ்நிலையும் நமது தர்பியத்தாகும்.

5. நிலைமைகள் மாறி மாறி வரும். அதில் நாம் உறுதியாக இருக்க வேண்டும்.

6. வேலையில் ஈடுபட்டால்தான் சூழ்நிலையை எதிர்க்க முடியும்.

7. பாங்கு சொன்ன பிறகு கஸ்டமர் பணத்துடன் வருவார். இப்போது தாயிக்குமோதல் ஆரம்பமாகுது. வியாபாரமா? தொழுகையா? அல்லாஹ் மோதவிடும் இந்த சோதனை

யில் எது மிகைக்கும்? எதில் எதீன்? முடிவு மனிதன் கையில்.

8. 40 நாளின் நதீஜா ஊருக்கு போன பின்தான் தெரியும்.
9. ஜமாஅத்தில் எத்தனை எகீன் தேவைப்பட்டதோ அதைவிட இரண்டு மடங்கு ஊரில் தேவை.
10. நமக்கு ஊரில் இரண்டு வேலை 1. இன்பிராதி. 2. இஜ்த்திமாயி.

## 85. "எல்லாமே அவசியம்"

1. இந்த வேலையில் இஸ்த்திகாமத் அவசியம்.
2. தாயீகளுக்கு இஸ்த்திஃலாஸ் அவசியம்
3. அமல்களுக்கு இஹ்லாஸ் அவசியம்
4. ஒவ்வொரு தீன் உழைப்பும் அவசியம்
5. தப்லீக், தாவத்துடைய உழைப்பும் அவசியம்.
6. தப்லீகில் அமல்கள் அவசியம்
7. எல்லா நிலைகளிலும் உசூல் பேணுவது அவசியம்
8. தாயீக்கு ஆறு நம்பர் பேச்சுதான் அவசியம்.
9. அமீருக்கு கீழ்படிவது சாத்திக்கு அவசியம்
10. தவ்பா செய்வது முஃமினுக்கு அவசியம்.

## 86. "இஸ்த்திஃலாஸ் என்றால் இதுதான்"

தீனுடைய வேலை செய்பவர்கள். இந்த வேலையை மட்டும்தான் செய்ய வேண்டும். வேலைதான் அசல். மற்ற தீனுடைய வேலைகள் செய்யலாம் பொறுப்புடன். உதாரணமாக: நாம் மணப்பெண்போல, தப்லீக் என்ற மாப்பிள்ளைக்கு நம்மை நிக்காஹ் செய்து உள்ளார்கள். அந்த மாப்பிள்ளையை தவிர மௌத்துவரை வேறு ஒரு ஆணை

ஏறிட்டும் பார்க்கக்கூடாது. இதற்கு பெயர்தான், இஸ்த்திஃலாஸ் என்று சொல்லப்படும். எனவே இந்த வேலையை செய்பவர்கள், இந்த வேலையை மட்டும் செய்ய வேண்டும்.

## 87. ஏன் இந்த வித்தியாசம்?

அல்லாஹுதாஆல உலகில் இறக்கிய மொத்த வேதங்கள் நான்குதான். 1. தவ்ராத் இது முதலில் வந்த வேதம். ஹஜ்ரத் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு அருளப் பட்டது.

இரண்டாவதாக வந்த வேதம் "ஜபூர்" இது ஹஜ்ரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்டது.

மூன்றாவதாக இன்ஜீல் வேதம் இது ஹஜ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்டது.

நான்காவது வேதம் புனித குர்ஆன் இது நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு அருளப்பட்டது.

ஆக வேதங்களை ஒரு நபிக்கு ஒருவேதம் என்று அருளப்படவில்லை. வேதங்கள் குறைவு. ஆனால் நபிமார்கள் அதிகமாக அனுப்பப்பட்டார்கள். ஒரு ஹதீஸில் 1 லட்சத்து 24 ஆயிரம் என்றும், மற்றொரு ஹதீஸில் 2 லட்சத்து 24 ஆயிரம் என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்த வித்தியாசம் ஏன்?

பூமியில் உழைப்பு அவசியம் என்பதை காட்டுவதற்காக அல்லாஹ் இப்படி அமைத்துள்ளான்.

## 88. "தக்வாவும்- இஹ்லாஸும்"

ஈமானில் தக்வாவும், இஹ்லாஸும் அவசியம் இருக்க வேண்டும்.

தக்வா வருவதற்கான வழி.

வாழ்க்கையில் சிறிய பாவம் கூட நிகழ்ந்து விடாதபடி எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

இஹ்லாஸ் வருவதற்கான வழி.

வாழ்க்கையில் ஒரு சின்ன நன்மையை கூட விட்டு விடக்கூடாது. கவனமாக இருக்க வேண்டும்.

## 89. இளமையின் நேர்வழி

மனிதன் பல நிலைகளில் வாழ்கிறான். அவனுக்கு இளமை பருவம், முதுமைப் பருவம் என்ற இரண்டு பருவங்கள் வருகின்றன. இளமைப்பருவம் இளம் சூடான பருவம். அல்லாஹ்வுக்கு ரொம்பப் பிடித்த பருவம். இளமையின் கண்ணீர் அல்லாஹ்வுக்கு ரொம்ப பிடிக்கும். வாலிப பருவத்தை தீனில் கழித்தவர்களுக்கு நாளை கியாமத் நாளில் அர்ஷின் நிழல் கீழ் வைத்து அல்லாஹ் அவர்களுக்கு விருந்து கொடுப்பான். எனவே ஒருவன் இளமை பருவத்தில் நேர்வழிப் பெற்றுவிட்டால் அவன் மூலம் உலகில் பலர் நேர்வழி அடைவார்கள்.

## 90. ''அல்லாஹ் யாருடன்?''

அல்லாஹுத் தாஆலா அமல் உள்ளவர்களிடம் இல்லை.
உதாரணம்: இன்னல்லாஹ மாஅஸலாத்தீன்
இன்னல்லாஹ மாஅஜக்காதீன்
இன்னல்லாஹ மாஅ ஹஜ்ஜீன்

என்று குர்ஆனில் கூறவே இல்லை. எனவே அமல்களோடு அல்லாஹ் இல்லை. அந்த அமல்களுக்கு நன்மை இருக்கிறது. அமலுக்குரிய நன்மைகளை அவன் இஷ்டப்படி கொடுப்பான்.

அல்லாஹுத் தாஆலா ஸிபத்துள்ளவர்களிடம் இருக்கின்றான். இதைப்பற்றி அல்லாஹ் சொல்வதை பாருங்கள்.

உதாரணம்: இன்னல்லாஹ மாஅல் முத்தவக்கிலீன்.
இன்னல்லாஹ மாஅல் முத்தகீன்
இன்னல்லாஹ யுஹிப்புல் முஃஃஸினீன்
இன்னல்லாஹ மாஅல் முஃஃமினீன்.

தீனுடைய வேலை செய்பவர்கள் அமல் செய்வதோடு மேலான ஸிபாத்துகளை அடைய முயற்சிக்க வேண்டும்.

## 91. "நன்மைகளை மறையுங்கள்"

தஃஃவத்துடைய வேலையில் இஃஃலாஸ் மிக மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. தீனுடைய வேலையை கொஞ்சமாக செய்தாலும் இஹ்லாஸோடு செய்தால் போதும் பெரும் பலன் ஏற்படும். பேருக்கும், புகழுக்கும் நிறைய அமல் செய்தால் அவை நரகில் கொண்டுபோய் சேர்த்துவிடும்.

"பாவங்களை மறைப்பதுபோல் நன்மைகளை மறைக்காதவரை உங்களில் யாரும் இஹ்லாஸ் உடையவராக ஆக முடியாது என்று அலிகார் யுனிவர்சிட்டி புரபசர் நாதிர் அலிகான் சாஹிப் கூறினார்கள். இவர்கள் வருஷம் (11) பதினொருமாதம் அல்லாஹ்வின் பாதைக்காக கொடுக்கிறார்கள்.

## 92. தியாகமா? வசதியா?

தீனுடைய வேலைக்கு அசல் தியாகம்தான்: தியாகத்தோடு தீனுடைய வேலை செய்தால் உலகில் ஹிதாயத் பரவும். மாறாக வசதி வாய்ப்போடு சொகுசாக தீன் வேலை செய்தால் உலகில் குப்ர்பரவும்.

1. அல்லாஹ்வை ரப்பாக ஏற்றுக் கொள்வது.
2. அல்லாஹ்வின் கட்டளைகளை ஏற்றுக் கொள்வது.

இதற்கு தியாகத்தோடு தீன் வேலை செய்தால் மேற்கண்ட இரு தன்மைகள் உண்டாகும். மாறாக வசதி வாய்ப்

போடு சொகுசாக தீன் வேலை செய்தால் அல்லாஹ்வின் கட்டளைகளை நிராகரிக்கும் தன்மை உண்டாகும். அல்லாஹ் வின் கட்டளைகள் நிராகரிக்கும்போது அங்கு குப்ர்உண்டாகும்.

குர்ஆனில் இரண்டுவிதமான கட்டளைகளை அல்லாஹ் சொல்லியிருக்கிறான்.

1. நேரடியான கட்டனை. தொழுகை, நோன்பு, ஜக்காத், ஹஜ்.

2. மறைமுக கட்டளை. இன்னல்லாஹ யுஹிப்புல் முஃஃஸினீன் (உபகாரியை அல்லாஹ் விரும்புகிறான்)

முத்தகீன்கள், முத்த வக்கிலீன்கள் இவர்களை அல்லாஹ் நேசிக்கிறான். இவைகள் நேரடியான இது செய்யாதே இதை செய் என்று கூறும் நேரடியான கட்டளை அல்ல. மறைமுகமான கட்டளையாகும்.

அவர்கள் இரவில் தங்கள் விலாக்களை விட்டும் விலகி அல்லாஹ்வை தொழுது அவனை அழைப்பார்கள் என்று சொல்கிறான். இதுபோல பல மறைமுக கட்டளைகளை குர்ஆனில் கூறி இருக்கின்றான்.

ஒருவர் கஷ்டங்களை, தியாகங்களை அனுபவித்தால் தான் அல்லாஹ்வின் மறைமுக கட்டளைகளை ஏற்றுக் கொள்ளும் தன்மை வரும். வசதி, சொகுஸோடு வேலை செய்தால் இந்த தன்மைகள் அவர்களிடம் வராது. எனவே அல்லாஹ்வின் மறைமுக கட்டளைகளை நிராகரிக்கும் தன்மை உண்டாகும். அதாவது குப்ர் உண்டாகும்.

எனவே மறைமுகமான கட்டளையும் அல்லாஹ்வின் கட்டளைதான்.

## 93. "கஃபு தோழர்களின் முஜாஹதா"

முஜாஹதாவுடன் யார் அல்லாஹ்வின் பாதையில் சென்று உறங்குகிறார்களோ அதனால் உலகில் ஹிதாயத் பரவும். அல்லாஹ் தீனில் முஜாஹதாவை விரும்புகிறான்.

உதாரணம்: அஸ்ஹாபுல் கஃபு குகை தோழர்கள் மொத்தம் 7 பேர்கள் இவர்கள் வாலிபர்கள். மேலும் அந்நாட்டு அரசனிடம் முக்கிய மந்திரிகளாவார்கள். அரசாங்க சொகுசு சுகங்களை விட்டு விட்டு ஈமானை பாதுகாக்க காரணம் அரசன் தங்களை காபிராக ஆக்கிவிடுவான் என்ற அச்சத்தால் அரண்மனையைவிட்டு வெளியேறி, எந்த வசதியும்இல்லாத இருட்டு குகைக்குள் சென்று 300 வருஷம் தூங்கினார்கள். அதனால் ஹிதாயத் பரவியது. அவர்கள் முஜாஹதாவுடன் தூங்கியதற்கே ஹிதாயத் பரவியது என்றால், அவர்கள் வேலை செய்து இருந்தால். அந்தக் காலத்தில் எவ்வளவு பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்கும். இதற்கு மாற்றமாக வசதி வாய்ப்புகளோடு தீனுடைய வேலை செய்தால் ஹிதாயத் இல்லை.

## 94. "அதிசயம் ஆனால் உண்மை"

கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் காலத்தில் மக்கள் மூன்று வகையினராக இருந்தார்கள்.

1. முஸ்லிம்கள்: இவர்கள் முற்றிலும் அல்லாஹ் ரசூலுக்கு கட்டுப்பட்டு வழிபட்டவர்கள்.

2. காபிர்கள்: முற்றிலும் அல்லாஹ் ரசூலை நிராகரித்தவர்கள்.

3. முனாபிக்குகள்: மதில்மேல் பூனையாக நின்றவர்கள். கழுத்தை அறுப்பவர்கள்.

ஒரு அதிசயமான விஷயம் என்னவென்றால் முனாபிக்குகள் மொத்தம் 420 பேர்கள் இருந்தார்கள். ஆண்களில் 300 பேர், பெண்களில் 120 பேர். 420 முனாபிக்குகளும் மதினத்து அன்சாரிகளில் இருந்து உருவானவர்கள். மாறாக மக்காவில் இருந்து ஹிஜ்ரத் செய்து வந்த முஹாஜிரீன்களில் எவரும் முனாபிக்காக இருக்கவில்லை. காரணம் ஹிஜ்ரத்தை அல்லாஹ் கபூல் செய்தான். ஹிஜ்ரத் ஒரு முழுமையான அமலாகும்.

## 95. "ஈமான்"

ஈமான். ஈமானுடைய உண்மை நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு 3 விதமான உழைப்புகள் செய்ய வேண்டும்.

1. தஃவத்:- நடைமுறைக்கு மாற்றமாக அதிகம் அதிகமாக பேசவேண்டும். கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் வாழ்க்கையில்தான் வெற்றி இருக்கிறது என்பதாக தஃவத் கொடுப்பது (படைப்பினங்கள்) பிரபஞ்சத்தின் மூலமாக அல்லாஹ்வுடைய குத்ரத்தை புரிய வைப்பது மாற்றார்களுக்காக உள்ளது.

அல்லாஹ்வுடைய அம்ர் (கட்டளைகள்) மூலமாக அல்லாஹ்வுடைய குத்ரத்தை புரிய வைப்பது முஸ்லிம் களுக்கு உள்ளது. ஸஹாபாக்களின் ஈமானை முன் வைத்து தஃவத் கொடுக்க வேண்டும். (ஈமானுடைய ஹல்கா அமர்வது)

2. மஷ்க் (பயிற்சி) தனிமையில் அமர்ந்து சிந்திக்க வேண்டும். என்னுடைய ஈமான் எந்த நிலையில் இருக்கிறது என்று அல்லாஹ்வுடைய குத்ரத்தை வல்லமைகளை அதிக அதிகமாக பேசுவது, கேட்பது, பார்ப்பது, சிந்திப்பது இந்த நான்கு வழிகள் மூலமாக ஈமான் உருவாகும். பாவமான விஷயங்களை பார்ப்பது, பேசுவது, கேட்பது, சிந்திப்பது இந்த நான்கு வழிகள் மூலமாக ஈமான் கெட்டு விடும். ஈமானுக்கு மாற்றமான விஷயங்கள் நம்மிடம் நடந்து விட்டால் உடனடியாக அதற்கு பரிகாரம் தேடுவது, தவ்பா செய்வது.

3. துஆ:- ஈமானுடைய ஸலாமத்தையும், ஈமானுடைய உண்மை நிலையை அல்லாஹ்விடம் கேட்பது இறுதி முடிவை நல்லதாக ஆக்க அல்லாஹ்விடம் கேட்பது.

## 96. தொழுகை

தொழுகையுடைய உண்மை நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு 3 விதமான உழைப்புகள் செய்வது.

1. தஃவத்:- தொழுகை மூலமாக வானுலக உதவியை நேரடியாக அல்லாஹ்விடம் இருந்து பெருவது தொழுகையுடைய தஃவத் தொழுகை இல்லாத மக்களை தொழுகையாளிகளாக மாற்றுவதற்காக வேண்டி அல்ல. மாறாக நம்முடைய தொழுகையை சரி செய்வதற்காக வேண்டிதான். தொழுகையுடைய தஃவத் கொடுக்க வேண்டும் (அஸ்பாப்) அதாவது வியாபாரம், விவசாயம், தொழில்துறை இஃதெல்லாம் மாற்றார்களுடைய் காரண காரியம் முஸ்லிம்களுடைய காரண காரியம் (அஸ்பாப்) அமல்கள்தான் என்று தஃவத் கொடுக்க வேண்டும்.

2. பயிற்சி (மஷ்க்):- தொழுகை 5 விஷயங்களைக் கொண்டு வர வேண்டும்.

1. யாகீன்:- இந்த தொழுகையின் மூலமாக எந்த சிறிய பெரிய தேவையாக இருந்தாலும் அல்லாஹ் தருவான் என்ற நம்பிக்கை வரவேண்டும்.

2. இஹ்திசாப்:- என்ன நன்மை தருவான் என்று விளங்குவது தொழுதால் அல்லாஹ் என்ன நன்மை தருவான் என்று சொன்னானோ அதை முன் வைத்து தொழுவது.

3. இல்மு (அறிவு) தொழுகையில் எப்படி நிற்பது எது சுன்னத், எது நபில், வாஜிபு என்ன ஓதுவது, குர்ஆனை சரி செய்வது.

4. இஹ்ஸான்: அல்லாஹ் என்னைப் பார்க்கிறான். நான் கியாமத் மஹ்ஷர் மைதானத்தில் நிற்கிறேன். என் முன்னால் ஆஃமால் நாமா செயலேடு விரிக்கப்பட்டிருக்கிறது. வலப்பக்கம் சுவர்க்கமும், இடப்பக்கம் நரகமும் இருக்கின்றது. தலைப்பக்கம் மலக்கள் மௌத்து நிற்கிறார்கள் என்று நம் சிந்தனையை ஓர்மைபடுத்துவது.

5. இக்லாஸ்:- இந்த தொழுகையை அல்லாஹ்வுக்காக மட்டும் தொழுவது அதன் மூலம் அல்லாஹ் என்னை பொருந்திக் கொண்டு சந்தோஷப்படுவது மட்டும் நோக்கமாக வைப்பது.

3. துஆ:- தொழுகையுடைய உண்மை நிலையை அல்லாஹ்விடம் கேட்பது தொழுகையில் உள்ளச்சத்தை ஓர்மையை அல்லாஹ்விடம் கேட்பது.

## 97. "இல்மு"

இல்முடைய உண்மை நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு மூன்று விதமான உழைப்புகள் செய்ய வேண்டும்.

1. தஃவத்அல்லாஹ் எதை விரும்புகின்றானோ அதுதான் இல்மாக இருக்கிறது. உண்மையான நுபுவத்துடைய இல்மின் பக்கமாக மக்களை அழைக்க வேண்டும். இல்மு என்றால் என்ன? கப்ருடைய 3 கேள்விகள் தயாரிப்பதாகும். 1. ரப்பு யார் 2. நபி யார் 3. தீன் என்ன

இல்மு என்பது நிலைமைகளுடைய கட்டளையை அறிவது. இந்த நேரத்தில் அல்லாஹ் என்னிடம் இருந்து என்ன விரும்புகிறான் என்பதாக அறிவது. இரண்டு வகையான இல்மு இருக்கிறது. 1. நாவுடைய இல்மு 2. உள்ளத்துடைய இல்மு (நாவுடைய இல்மு) இந்த கல்வி நாவளவில் மட்டும் இருக்கும். உள்ளத்தில் அதன் குணபாடு இருக்காது. இந்தக் கல்வி மனிதனை வீணாக்கி விடும். (உள்ளத்துடைய இல்மு)

இந்த கல்வி உள்ளத்தில் குணபாடு இருக்கும். மனிதனிடம் அமல் உருவாக்கும்.

2. பயிற்சி பளாயில் இல்மு தஃலிமுடைய மஜ்லிஸில் சுலபமாக அமர்ந்து பயிற்சி செய்வது. ஒழுவுடன் அமர்வது. எதன்மீதும் சாயாமல் அமர்வது. அத்தஹிய்யாத்தில் அமர்வது. நடுவில் எழுந்து செல்லக்கூடாது. நடு நடுவே பேசக் கூடாது. தலைப்பு ஹதீஸை 3 முறை படிப்பது கவனமாக கேட்பது. கண்ணியமாக கேட்பது. இந்த தன்மைகளுடன் அமரும்போது தாலிமுடைய இல்ம் நூர் நம் உள்ளத்தில் இறங்க கூடியதாய் இருக்கிறது. மஸாயில் இல்மு ஆலீம் உலமாக்களிடம் சென்று அவர்களை கண்ணியப்படுத்தி விளங்குவது.

3. துஆ:- இல்மே நாபி (F:):- பயனுள்ள இல்மை அல்லாஹ்விடம் கேட்பது தஃலிமில் மன ஓர்மையுடன் கண்ணியத்துடன் அமர்வதற்கு அல்லாஹ்விடம் கேட்பது.

## 97. "திக்ர்"

திக்ருடைய உண்மை நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு 3 விதமான உழைப்புகள் செய்வது.

1. தஃவத்: எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வுடைய ஞாபகம் வந்து விட வேண்டும். இதுதான் திக்ர். திக்ர் செய்வதல்ல அசல் நோக்கம். திக்ர் செய்யும்போது தனக்கும் அல்லாஹ்வுக்கும் இடையே எந்த படைப்புகளுடைய தொடர்பு சிந்தனை இருக்கக்கூடாது. இபாதத் மற்றும் திக்ருடைய கடமை தனிப்பட்ட அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியதாகும். அல்லாஹ் வுடைய ஞாபகம் இல்லாமல் திக்ர் செய்வது பித்அத் என்பதாக உலமாக்கள் கூறியுள்ளார்கள். திக்ருடைய நோக்கம் எண்ணிக்கை அல்ல; மாறாக அல்லாஹ்வுடைய ஞாபகம் வந்துவிட வேண்டும்.

2. பயிற்சி:- நாம் திக்ர் செய்யும்போது ஒழுவுடன் கிப்லாவை முன்நோக்கி ஒவ்வொரு தஸ்பீஹ்களையும் அதன்

அர்த்தங்களையும் விளங்கி ஓர்மைப்படுத்தி சிந்தனை செலுத்தி திக்ர் செய்வது.

3. துஆ: அல்லாஹ்வுடைய ஞாபகத்தையும், திக்ருடைய உண்மை நிலைகளை கேட்பது.

## 98. "இக்ராம்"

இக்ராமுடைய உண்மையான நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு மூன்றுவிதமான உழைப்புகள் செய்வது:-

1. தஃவத் : நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் நற்குணங்களின்மீது மக்களை அழைக்க வேண்டும்.

2. பயிற்சி: 3 விதமான பயிற்சிகள் செய்வது.

1. பணிவு 2. சமமாக மற்றவர்களையும் நினைப்பது. 3.ஹித்மத்: நம்முடைய வேலையை நாமே செய்வது. 1. பணிவு:நம்மை விட சிறியவர்களுக்கு அதிகமாக ஹித்மத் செய்வதால் பணிவு ஏற்படும்.

3. துஆ: இக்ராமுடைய உண்மை நிலை நம்மிடம் வருவதற்கு துஆ செய்வது.

## 99. "இஹ்லாஸ்"

இஹ்லாஸுடைய உண்மை நிலை நம்மிடம் வருவதற்கு மூன்றுவிதமான உழைப்புகள் செய்வது.

1. தஃவத்: எதைச் செய்தாலும் அல்லாஹ்வுடைய பொருத்தத்திற்காக மட்டுமே செய்வது இதன் நோக்கமாகும் சிறிய முகஸ்துதி கூட ஷிர்க்காகும். சிலை வணக்கம் செய்வது மாற்றார்களுடைய இபாதத் ஆகும். அல்லாஹ் அல்லாதவர்கள் அனைத்தும் சிலை போன்றது. அதை நாம் செய்தால் அது சிலை வணக்கம் போன்றுதான் பொருள்.

2. பயிற்சி: 3 தரங்கள் இருக்கின்றன.,

1. கடைசி தரம் 2. நடுத்தரம் 3. உயர்தரமானது

1. கடைசி தரம்:- எதை செய்தாலும் அல்லாஹ்வுக்காக மட்டுமே செய்வது. அது அல்லாஹ்வுக்காக இல்லையோ அது அல்லாஹ் அல்லாதவற்றிற்காக ஆகிவிடும். அது ஷிர்க்காகும்.

2. நடுத்தரமானது: எந்த அமலை செய்தாலும் அல்லாஹ்விற்காக செய்வது. அதன் நன்மையை அல்லாஹ் விடமே கேட்பது எதிர்பார்ப்பது.

3. உயர்தரமானது: எதை செய்தாலும் அல்லாஹ்விற்காக மட்டுமே செய்வது. அதனால் தரப்படும் பிரதிபலனை அல்லாஹ்விடம் கூட எதிர்பாராமல் அல்லாஹ்வின் பொருத்தத்தை மட்டும் நாடி செய்வது.

3. துஆ: இஹ்லாஸ் உடைய உண்மை நிலையை அல்லாஹ்விடம் கேட்பது.

## 100. "தஃஃவத்தே இலல்லாஹ்"

இதன் உண்மை நிலை நம் வாழ்க்கையில் வருவதற்கு 3 விதமான உழைப்புகள் செய்வது.

1. தஃஃவத்: நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் கொண்டு வந்த தீனின் பக்கமாக மக்களை அழைப்பது நுபுவத்துடைய பொறுப்புடைய உணர்ச்சிகளை மக்களின் உள்ளங்களில் உண்டு பண்ணுவது.

2. மஷ்க்: எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வுடைய பாதையில் வெளியேறுவது. சஹாபாக்கள் எல்லா நிலை களிலும் அல்லாஹ்வின் பாதையில் வெளியேறினார்கள். அப்படி அவர்கள் செல்லும்போது பிரச்சனைகள் ஏற்பட்டது. ஆனால் அவர்கள் அந்தப் பிரச்சனைகளை பொருட்படுத்தாமல் அல்லாஹ்வின் உண்மையான அன்பைப் பெற வேண்டும்

என்பதற்காக அல்லாஹ்வின் பாதையில் வெளியானார்கள். அல்லாஹ் தாஆலா அந்த பிரச்சனைகளை தன்னுடைய பொறுப்பில் எடுத்துக் கொண்டு சஹாபாக்களை தஃவத் வேலைக்காக வேண்டி வெளியாக்கி விட்டான். அதைப்போல் நாமும் நமக்கு வரக்கூடிய பிரச்சனை களை நசுக்கிவிட்டு அல்லாஹ்வுடைய பாதையில் வெளியானால் நம்முடைய பிரச்சனைகளை அவனுடைய பொறுப்பில் எடுத்துக் கொண்டு நம்மையும் இந்த வேலைக்காக வேண்டி வெளியாக்கி விடுவான்.

துஆ: இஸ்த்திகாமத்துடன் இஸ்த்திக்லாஸுடன் கியாமத் நாள்வரை இந்த முபாரக்கான வேலையை செய்ய வேண்டும் முழு மனித சமுதாயம் முழுமையான ஹிதாயத் பெற வேண்டும் என்று அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்து கொண்டே இருக்க வேண்டும்.

தனக்காகவும் முழு மனித சமுதாயத்தின் ஹிதாயத் வேண்டி துஆ செய்வது நபிமார்களின் தன்மையுடன் சஹாபாக்களின் தியாகத்தை போன்று செய்வதற்கு து ஆ செய்ய வேண்டும்.

**நிறைவுற்றது முதல்பாகம்**

**இன்ஷா அல்லாஹ்**

**தொடரும் இரண்டாம் பாகம்**

**எங்களுக்கு வேண்டும்**

**உங்கள் துஆ பலம்**

***வஸ்ஸலாம்.***

பன்னூலாசிரியர்

அதிரை S.S. மௌலானாவின்

புத்தம் புதிய நூல்

அவிஸோ பப்ளிஷர்ஸின் அற்புத வெளியீடு...

# அமெரிக்கா பட அவமதிப்பும்...

(THE INNOCENCE OF MUSLIMS)

# இஸ்லாத்தின் வெற்றியும்....

நமது உயிரினும் மேலான கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் மேலான கண்ணியத்திற்கும், அவர்களின் பரிசுத்த குடும்பத்தினரின் கண்ணியத்திற்கும், பங்கம் விளைவித்து அவமதிப்பு செய்து அண்மையில் அமெரிக்காவிலிருந்து வெளிவந்த (THE INNOCENCE OF MUSLIMS) என்ற படம் பற்றி உண்மையும், பின்னணியும் கூறும் புரட்சி நூல்.

மானமுள்ள ஒவ்வொரு முஸ்லிம்களும் அவசியம் வாங்கிப் படித்து உலகம் முழுவதும் பரப்ப வேண்டிய அரிய பொக்கிஷம்.

**இன்ஷா அல்லாஹ் மிக விரைவில் உங்கள் கரங்களில்...**

இப்படிக்கு

**அவிஸோ பப்ளிஷர்ஸ்**

அதிராம்பட்டினம், செல்: 9788194182